# காந்தி வழி

## ஓர் அறிமுகம்

தொகுப்பாசிரியர்கள்

டாக்டர் மா. பா. குருசாமி, M.A., M.Litt., Ph.D.,

திரு. க. ரா. கந்தசாமி, M.A.,

**காந்திய இலக்கியச் சங்கம்**

காந்தி மியூசியம், மதுரை *625 020*

0452 - 2533957

| | |
|---|---|
| Title | : Gandhi Vazhi Vor Arimugam |
| Subject | : Gandhian Philosophy |
| Compiled and | |
| Edited by | : Dr. M.P. Gurusamy - Sri K.R. Kandasamy |
| Publishers | |
| Copy right | : Gandhian Literature Society<br>Madurai - 625 020 |
| Printed by | : Modern Offset, SIvakasi |
| Editions | : 9th Edition January 2020 |
| Copies | : 1500 |
| Price | : Rs. 30.00 |



## பொருளடக்கம்

# பதிப்புரை

காந்தியடிகள் ஒரு அற்புதமான மனிதர்; ஒப்பற்ற ராஜதந்திரி; அரசியலறிஞர்; சமய ஞானி; பொருளாதார நிபுணர்; சிறந்த கல்வியாளர்; எல்லாவற்றுக்கும் மேலாக, புதிய சமுதாயத்தைப் படைக்கத் தம் சத்திய சோதனையின் மூலம் புதுவழியினைக் கண்டுபிடித்துச் செயலாற்றிய கர்ம வீரர்; இணையற்ற சமுதாய விஞ்ஞானி, இந்தியா உலகிற்கு வழங்கிய உயர் செல்வம் ஆவார்.

அவர் வாழ்க்கையை முழுமையாகக் கண்டவர்; அவர் தொடாத துறை இல்லை. அனைவர்க்கும் நல்வாழ்வுகிட்ட அரசியல், பொருளாதாரம், சமயம், சமூகம் என எல்லாத் துறைகளும் எங்ஙனம் இயங்க வேண்டும் என விண்டு காட்டியுள்ளார். அவர் வழியினை விளக்கும் வகையில் நூலொன்று வெளியிட வேண்டுமென்று விரும்பினோம்.

அதற்கேற்ப, டாக்டர். மா. பா. குருசாமி அவர்களும், சகோதரர் க.ரா.கந்தசாமி அவர்களும் சில கட்டுரைகளைத் தொகுத்துத் தந்தனர். நாங்கள் விரும்பிய நூலுக்கு ஒரு முன்னோடியாகவும், காந்தி வழிக்கு ஒரு அறிமுகமாகவும் அமைந்த அத்தொகுப்பே இந்நூல்.

கட்டுரைகள் வழங்கிய அன்பர்கள், அவற்றைச் சிறப்பாகத் தொகுத்துதவிய சகோதரர்கள் மற்றும் மிகக் குறுகிய காலத்தில் அச்சிட்டுக் கொடுத்த அச்சக உரிமையாளர் ஆகிய அனைவர்க்கும் எங்கள் நன்றி உரியது.

இதனைப் படித்துப் பயன் பெறும் தமிழக மக்கள் புதிய பாரதத்தைப் படைக்கத் தம் பங்கைச் செலுத்துவார்களாக. வாழ்க வையகம்.

மதுரை-20

1-8-2005 காந்திய இலக்கியச் சங்கம்

# 1. காந்தி வழி

*டாக்டர். மா.பா. குருசாமி*

செயற்கரிய செய்து இறவாப் புகழ்பெற்ற காந்தியடிகளின் வாழ்க்கை நமக்கெல்லாம் வழிகாட்டியாகத் திகழ்கிறது. எல்லா மனிதர்களையும் போல சாதாரணமாக வாழ்க்கையைத் தொடங்கிய அவர் தனது வாழ்க்கையை ஓர் இயக்கமாக மாற்றிக் கொண்டார். இருபதாம் நூற்றாண்டின் தலை சிறந்த மனிதராக "மகாத்மா" என்று உலகமக்களால் போற்றப்பட்ட காந்தியடிகள் காட்டிய நெறி முறை தனிச்சிறப்புடையது. இன்றையப்போரிடும் உலகிலிருக்கும் வன்முறையை மாற்றி எங்கும் எதிலும் அகிம்சை மேலோங்கப் பாடுபட்ட அவரது வாழ்க்கையும், அவர் பின்பற்றிய கொள்கைகளும் நாம் அறிந்து கொள்ள வேண்டியவைகளாகும்.

## *சத்திய வாழ்க்கை :*

"மாந்தருள் தெய்வம்" என்று சான்றோர்களால் போற்றப்பெறுகின்ற மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி 1869 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் இரண்டாம் நாள் குஜராத் மாநிலத்தில் கத்தியவாரிலுள்ள போர்பந்தர் என்னுமிடத்தில் பிறந்தார். 1948ஆம் ஆண்டு ஜனவரி 30ஆம் நாள் வரை இந்த மண்ணுலகில் வாழ்ந்தார். ஏறத்தாழ எழுபத்தெட்டு ஆண்டுகளுக்கு மேல் இந்த வையகத்தில் வாழ்ந்து அவர் செய்த செயல்கள் மகத்தானவை.

சிறுவனாக இருந்த காலத்தில் அரிச்சந்திரன் நாடகம் பார்த்த காந்தி ''என்ன துன்பம் வந்தாலும் சத்திய வாழ்க்கையே வாழ்வது'' என்று உறுதி பூண்டார். இதனால் தனது வாழ்க்கையை "சத்திய சோதனைக்களமாக மாற்றிக் கொண்டார்.

மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி இந்தியாவில் பள்ளியிறுதிப் படிப்பு வரை படித்தார். திவானின் மகனாகப் பிறந்த அவர் நேர்மை வழியில் செல்லும் இயல்பைத் தந்தையிடமிருந்து பெற்றிருந்தார். அன்னையிடமிருந்து இறைப்பற்றை ஏற்றிருந்தார். பின்னால் இங்கிலாந்தில் சென்று சட்டம் பயின்ற காலத்தில் சமயங்களின் சாரத்தைக் கற்றுக் கொண்டார்.

தனிமனித வாழ்க்கையை உள்ளும் புறமும் தூய்மையாக்க முயன்று அமைத்து கொண்ட காந்தியடிகள் தென்னாப்பிரிக்கா

விற்குச் சென்றார். அங்கு வழக்குரைஞராகத் தொழில் நடத்திக் கொண்டே பொதுப்பணியில் ஈடுபட்டார். அங்கு அவர் படித்த ரஸ்கின் எழுதிய "கடையனுக்கும் கடைத்தேற்றம்" (Unto this Last) என்னும் நூல் அவரிடம் உயர்ந்த சமுதாய இலட்சியத்தை உருவாக்கியது. சமுதாயத்தின் கீழ்மட்டத்தில் அல்லற்படுகின்ற ஏழை எளியவர்களுக்காக வாழ வேண்டுமென்று உறுதிபூண்ட அண்ணல் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த இந்தியர்களின் துயர் துடைக்க அகிம்சை வழியில் பெரும் போராட்டம் நடத்தினார். ''கத்தியின்றி ரத்தமின்றி" நீதிக்காகப் போராடுகின்ற புதிய போர்முறையான சத்தியாக்கிரகத்தைத் தென்னாப்பிரிக்காவில் கண்டுபிடித்தார்.

1914 ஆம் ஆண்டில் தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவிற்கு திரும்பிய காந்தியடிகள் அவரது இறுதி மூச்சுவரை இந்தியர்களின் விடுதலைக்காகவும், மேம்பாட்டிற்காகவும் இரவு பகலாக ஓய்வு ஒழிவின்றி அரும்பாடுபட்டார். வன்முறை மேலோங்கியிருந்த அரசியலிலும், தந்நலம் ஊடுருவி நின்ற பொருளாதாரத்துறையிலும், சாதி-மத வேறுபாட்டால் பிளவுபட்டுக் கிடந்த சமுதாய வாழ்விலும் ஆன்மீக நெறிமுறைகளை நுழைத்து, எல்லோரும் இன்புற்று வாழத் தொண்டு செய்தார். ''இந்தியாவின் தந்தை'' என்று எல்லோராலும் மதிக்கப் பெறுகின்ற காந்தியடிகள் பின்பற்றிய, எடுத்துரைத்த கொள்கைகளில் உயிர்நாடியான வற்றைச் சுருக்கமாகத் தொகுத்துக் கூறலாம். இவற்றின் விரிவாக்கமாக இந்த நூலின் பிற்பகுதிகள் அமைந்துள்ளன.

### ***இலட்சியமும் வழிமுறையும் :***

உலகத்தில் எத்தனையோ மகான்கள் தோன்றியிருக்கின்றனர். மனிதகுலம் எத்தகைய உயர்ந்த இலட்சியத்தோடு வாழ வேண்டுமென்பதை வரையறுத்துக் கூறியிருக்கின்றனர். இலட்சியமற்ற வாழ்க்கை உயிரற்ற உடல் போன்றதென்பதே சான்றோர்களின் கருத்தாகும். ஆனால் இலட்சியத்தை எப்படி அடைவதென்பதைப் பற்றிய கருத்து வேறுபாடு நீண்ட காலமாக இருந்து வருகின்றது. ஆன்மீகவாதிகள் இலட்சியத்தைப் போன்றே வழிமுறையும் உயர்ந்ததாக இருக்க வேண்டுமென்று வலியுறுத்தி வந்தனர். ஆனால் அரசியல்வாதிகளும் பிறரும் ''எப்படியாவது இலட்சியத்தை அடைந்தால் போதும்'' என்ற கருத்தை வளர்த்து வந்தனர்.

"எல்லோரும் இன்புற்று வாழ வேண்டும்" என்ற உயர்ந்த இலட்சியத்தைக் கொண்ட காந்தியடிகள், அந்த இலட்சியத்தை

அடையும் வழிமுறையும் தூய்மையானதாக இருக்க வேண்டுமென்று கருதினார். சத்தியம் என்ற இலட்சியத்தை அடைய அகிம்சை என்ற வழிமுறையைப் பின்பற்ற வேண்டுமென்று கூறினார். வாயினால் கூறியதோடு மட்டுமல்லாமல் தனது வாழ்க்கையில் பின்பற்றி, வழிமுறையின் தூய்மை எப்படி இருக்க வேண்டுமென்பதையும் காட்டினார்

இதனால் தான் புகழ் பெற்ற உலக வரலாற்று ஆசிரியரான டாயின்பி என்பவர், 'காந்தியடிகள் இந்த உலகில் எத்தனையோ சாதனைகள் செய்திருந்தாலும் அவற்றிற்கெல்லாம் மகுடம் போலத் தோன்றும் சிறப்பான சாதனை இந்த நூற்றாண்டின் “இலட்சியத்தை விட வழிமுறையே மிக முக்கியமானது' என, வாழ்க்கையில் பின்பற்றி நிரூபித்தது தான்' என்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

காந்திய வழிமுறை நேர்மையான முறையில் உயர்ந்தனவற்றைப் பெற வேண்டுமென்று கற்றுத் தருகின்றது. எந்த விதை போடுகின்றோமோ அந்தச் செடிதான் முளைக்கும். வினை விதைத்து விட்டுத் தினையை அறுக்க முடியாது. ஆதலால் இலட்சியத்தில் கவனம் செலுத்துவதைப் போன்றே வழிமுறையிலும் கவனம் செலுத்த வேண்டும்.

## *சத்தியாக்கிரகம் :*

உயர்ந்த இலட்சியத்தை கொண்டவர் களால் அநீதியைக் கண்டு பேசாமல் இருக்க முடியாது, பொதுவாக சமுதாயத்தில் தீமை நடைபெறுகின்ற பொழுது மக்கள் மூன்று வழிகளில் நடந்து கொள்ளலாம். முதலாவதாக, தீமைக்குப் பணிந்து போவது - இது கோழைத்தனம். இரண்டாவதாக, தீமையை எப்படியாவது - வன்முறையின் மூலமாவது-எதிர்த்து வெற்றி பெற முயல்வதாகும். மூன்றாவதாக தீமையை அறவழியில் எதிர்ப்பதாகும். காந்தியடிகள் மூன்றாவது முறையையே விரும்பினார். இதனையே சத்தியாக்கிரகம் என்ற புதிய போர்முறையாக உலகிற்கு வழங்கினார்.

காந்தியடிகள் கண்டு பிடிப்புக்களில் தலைசிறந்ததான சத்தியாக்கிரகம் தீமை செய்யும் மனிதனை வெறுக்காமல் தீமையை மட்டும் அகற்றும் வழிமுறையை நமக்குக் கற்றுத்தருகின்றது. அன்பின் மூலம் எதிரியை வெற்றி கொள்ளும் அகிம்சைப் போராட்ட நெறிமுறை புதிய உலகை உருவாக்கத் துணை செய்யும்.

## *எண்ணிக்கையல்ல தன்மையே முக்கியம் :*

இன்றைய உலகில் பெரும்பான்மையான மக்களின் கருத்துக்கே முதலிடம் கொடுக்கின்றனர். மக்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் நன்மை தீமைகளை முடிவு செய்கின்ற முறையை காந்தியடிகள் ஏற்றுக்கொள்ளவில்லை. மனிதனின் தன்மைக்கே முதலிடம் கொடுத்தார். நல்லதை எண்ணும் மனிதன் ஒருவனாகக் கூட இருக்கலாம். பெரும்பாலானவர்கள் தவறான முடிவுக்கும் வரலாம். ஒருவன் நல்லவனாகவும், உள்ளத் திண்மை உடையவனாகவும், சத்திய வழியில் செல்பவனாகவும் இருந்தால் அவனது உயரிய நோக்கமும் தன்மையும் வெற்றிபெறுமென்பதே காந்தியடிகளின் கருத்தாகும். நன்மை வெற்றிபெற சத்தியாக்கிரகம் துணை செய்யும். சத்தியாக்கிரகத்தின் வெற்றி அதனைப் பின்பற்றுகின்றவர்களின் எண்ணிக்கையில் அல்ல, போராடுகின்றவர்களின் தன்மையில் அடங்கி இருக்கின்றது.

## *உரிமையும் கடமையும் :*

மக்களாட்சி செவ்வனே நடைபெற நல்ல தன்மைகளைக் கொண்ட மக்கள் தேவை. மக்களிடம் உரிமை உணர்வையும் வேட்கையையும் வளர்க்க முயல்பவர்கள் கடமைகளை வலியுறுத்திக் கூற மறந்து விடுகின்றனர். உண்மையில் கடமைகளிலிருந்து தான் உரிமைகள் பிறக்கின்றனவென்பதை காந்தியடிகள் விளக்கினார். கடமைகளைச் சரிவரச் செய்யாதவர்கள் உரிமைகளைக் கேட்கத் தகுதியற்றவர்களாவர். இரண்டாவது உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது ஹெச். ஜி. வெல்ஸ் என்ற அறிஞர், ஒவ்வொரு நாட்டிலும் எந்த ஆட்சி முறை இருந்தாலும் குறைந்த பட்சம் என்னென்ன அடிப்படை உரிமைகள் குடிமக்கள் அனைவருக்கும் இருக்க வேண்டுமென்பதை வரையறுக்கக் கருதி உலகிலுள்ள பல தலைவர்களுக்குக் கடிதம் எழுதினார். காந்தியடிகளுக்கும் எழுதினார். முதலில் காந்தியடிகள் பதில் எழுதவில்லை. மறுபடியும் வெல்ஸ் எழுதிய பொழுது காந்தியடிகள் எழுதிய பதில் குறிப்பிடத்தக்கதாகும். ''உரிமைகளைப் பற்றிய பேச்சு எங்கும் யார் தூண்டுதலுமின்றி நடை பெற்றுக் கொண்டே இருக்கின்றது. கடமைகளை வலியுறுத்தி, கடமைகளின் பட்டியலைத் தீட்டுவதுதான் இன்றையக் காலத்தேவையாகும்'' என்று எழுதியிருந்தார்.

## *உண்மையான நாகரிகம் :*

கடமைகளை உணர்ந்து நடக்கும் மக்களிடம் உண்மையான நாகரிகம் வளர்ந்திருக்கு மென்பது அண்ணலின் கருத்தாகும். நாகரிகமென்ற பெயரில் புறத்தேவைகளைப் பெருக்கிக் கொண்டேயிருக்கும் போக்கை காந்தியடிகள் கண்டிக்கின்றார். அளவின்றித் தேவைகளைப் பெருக்கும் மனிதனிடம் விலங்கியல்பே மேலோங்குகின்றது. உண்மையான உயர்ந்த நாகரிகம் என்பது தேவைகளின் பெருக்கத்தில் அல்ல; தேவைகளின் சுருக்கத்தில்தான் இருக்கின்றது. தானே விரும்பித் தனது தேவைகளைக் கட்டுப்படுத்தத் தெரிந்த மனிதன் உயர்ந்த வாழ்வியல் தரமுடையவனாக இருப்பான்.

எளிய வாழ்க்கையும் உயரிய சிந்தனையும் தானே விரும்பித் தனது தேவைகளைக் வாழ்க்கை வாழ்கின்ற மனிதன் உயர்ந்த சிந்தனையோடு வாழ்கின்ற பொழுது சமுதாயம் நெறிப்படுகின்றது. பற்றாக்குறையுள்ள ஏழ்மை வாழ்க்கை சமுதாயத்தில் இருக்கக் கூடாது. அதே போல ஆரவாரமிக்க போலி ஆடம்பர வாழ்க்கையும் நல்லதல்ல. இன்றியமையாத அடிப்படைத் தேவைகளைப் பெற்று மனநிறைவோடு வாழ்கின்ற எளிய வாழ்க்கை ஆன்மிக வளர்ச்சிக்குத் துணை செய்யும். அத்தகைய வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள்கள் ஒளிவிடக் காணலாம்.

## *உடல் உழைப்பு :*

''எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையும்'' கொண்டவர்கள் தங்களது தேவைகளை உழைத்தே பெறுவார்கள். இன்றைய சமுதாயத்திலுள்ள சொத்து, வருவாய் ஏற்றத்தாழ்வின் காரணமாகப் பலர் உழைத்து வாட, சிலர் உழைக்காமல் உண்டு களிப்பதனைக் காண்கிறோம், இதனாலேயே சமுதாயத்தில் வெறுப்புக்களும் போராட்டங்களும் ஏற்படுகின்றன. எல்லோரும் உழைத்து வாழ்கின்ற சமுதாய அமைப்பில் சுரண்டலுக்கு இடமிருக்காது. அன்பால் எல்லோரும் இணைந்து வாழ்கின்ற சமுதாய அமைப்பு முறை உருவாகும்.

## *சுதேசித் தத்துவம் :*

ஒவ்வொருவரும் உழைத்து வாழும் உயர் நெறியில் ஈடுபட்ட நிலையிலும் தன்னுடைய சில தேவைகளுக்காக மற்றவர்களின் உழைப்பால் கிடைக்கும் பொருட்களை வாங்க வேண்டிய தேவை ஏற்படுகின்றது. அப்பொழுது நமக்கு அருகிலுள்ளவர்கள் உற்பத்தி

செய்த பொருட்களை வாங்குவதே நமது கடமையாகும். இதனைச் ''சுதர்மங்களுள் ஒன்றாகக் காந்தியடிகள் கருதினார். இதுவே சுதேசித் தத்துவமாகும். நமது ஊர் மக்கள் எல்லாம் பசியின்றி வாழ வேண்டுமானால் நமது ஊரில் உற்பத்தியாகும் பொருட்களையே நாம் பயன்படுத்த வேண்டும்.

## *பரவல் முறை :*

சுதேசித் தத்துவம் அன்றாட வாழ்க்கையில் செயல்படுகின்றபொழுது பொருளாதாரப் பரவல் முறை அமையும். இன்றைய அமைப்பில் பொருளாதாரக் குவிதல் முறை இருக்கின்றது. சில நகரங்களுக்கு நாட்டிலுள்ள மூலப் பொருட்களை எல்லாம் கொண்டு செல்கின்றனர். பின்னர் அவற்றை நாடெங்கும் விற்பனை செய்கின்றனர். இதனால் நாட்டில் பல பகுதிகள் - குறிப்பாக கிராமங்கள் - வளர்ச்சி பெறுவதில்லை. அங்குள்ள மக்கள் வறுமையில் வாடுகின்றனர். பரவல் முறையில் நாடெங்கும் சிறு தொழில்கள் வளர்ந்தால் எல்லா மக்களுக்கும் வாழ வழி கிடைக்கும்.

பொருளாதாரத் துறையில் போன்றே அரசியலிலும் பரவல் முறை வேண்டும். ஒரு சில இடங்களிலோ சிலரின் கைகளிலோ அரசியல் அதிகாரம் குவிந்திருக்கக் கூடாது. மக்கள் தங்களது தேவைகளை நிறைவு செய்ய அதிகாரம் பெற்றிருக்க வேண்டும். காந்தியடிகள் கிராமப் பஞ்சாயத்துக்கள் அரசியல் அதிகாரப் பரவல் முறைக்கு அடிப்படையாக அமையுமென்று கருதினார்.

## *சர்வ சமய சமரசம் :*

சமுதாய, அரசியல், பொருளாதார வாழ்க்கை உயர்ந்த நெறி முறைகளின்படி அமைய சமய வாழ்க்கை வழி வகுக்க வேண்டும். உலகிலுள்ள சமயங்களின் சாரம் ஒழுக்கமே. சமயங்கள் உணர்த்தும் உயரிய அறக்கருத்துக்களை உணர்ந்து கொண்டவர்கள் சமயச்சண்டை களில் ஈடுபட மாட்டார்களென்பது காந்தியடிகளின் கருத்தாகும்.

காந்தியடிகளுக்கு முன்பு குறிப்பாக வடக்கில் வங்காளத்தில் இராமகிருஷ்ண பரமஹம்சரும் தெற்கில் வள்ளலாரும் இன்னும் சில சமயச் சான்றோர்களும் சர்வசமய சமரசக்கொள்கையைப் பரப்பினார்கள். காந்தியடிகள் நாடு முழுவதும் இந்தக் கொள்கையை ஏற்றுக்கொள்ளச் செய்தார். உண்மையான சமயம் மக்கள் ஒன்றுபட்டு வாழ வழி

வகுக்கின்றதென்பதை காந்தியடிகள் சொல்லாலும் செயலாலும் விளக்கியுள்ளார்.

### *சர்வோதயம் :*

காந்தியடிகளின் கருத்துக்களும் கொள்கைகளும் ஓர் ஒப்புயர்வற்ற, புதுமையான சமுதாயத்தை உருவாக்கும் நோக்கம் கொண்டிருந்தன. அவர் கனவுகண்ட சமுதாயத்தை "'சர்வோதயம்" என்ற பெயரால் குறிப்பிட்டார். முதலாளித்துவ சமுதாய அமைப்பில் சிலர் வாழப் பலர் வாடுகின்றனர். பொதுவுடைமை சமுதாயத்தில் பலர் வாழச் சிலரைப் பலியிடவும் முன் வருகின்றனர். சர்வோதய சமுதாயத்தில் எல்லோரும் இணைந்து வாழ்கின்ற சூழ்நிலை இருக்கும். சாதி - சமயப்பிரிவுகளோ, சொத்து வருவாய் ஏற்றத்தாழ்வுகளோ, இன- மொழி வேறுபாடுகளோ இன்றி எல்லோரும் எல்லா நலன்களும் பெற்று இணைந்து வாழ்வார்கள். உலகமே ஒரு குடும்பமாக வாழும் உயர்ந்த சமுதாய அமைப்பே அண்ணலின் இலட்சியமாக இருந்தது.

### *புதிய கல்வி :*

சர்வோதய சமுதாயத்தை உருவாக்க முதலில் புதிய மனிதர்களை உருவாக்க வேண்டும். இத்தகைய புதிய இலட்சிய மனிதனை உருவாக்க ஏற்ற கல்விமுறையைக் காந்தியடிகள் அமைத்தார். நமக்குக் கிடைக்கின்ற ஏட்டுக் கல்வி நமக்கு வாழ்க்கையை உணர்த்தாமலும், வாழ்வளிக்கும் ஆற்றலற்றும் இருக்கின்றது. இன்றையக் கல்விமுறை வாழும் முறையை நமக்குக் கற்றுத் தருவதில்லை.

"வாழ்க்கைக்கு வேண்டிய, வாழ்க்கை மூலம் கிடைக்கின்ற, வாழ்நாள் முழுவதும் கற்றுக் கொள்ளக்கூடிய புதிய கல்வி முறையை காந்தியடிகள் "'புதிய கல்வி'' என்ற பெயரில் வழங்கினார். தாய்மொழியின் மூலமாக, தொழிலை மையமாகக் கொண்டு சமுதாயப் பின்புலத்தில் கல்வி கற்றுக் கொள்ள வழிவகுத்தார்.

நாம் அமைக்க விரும்புகின்ற சமுதாயத்திற்கும் நாட்டிலுள்ள கல்விமுறைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. வெறும் மூளையை மட்டும் வளர்க்கும் கல்வியால் பெரும்பயன் விளையாது. உடலையும், உள்ளத்தையும், ஆன்மாவையும் வளர்த்து ஒருவகைக் கடமை உணர்வுள்ள நல்ல குடிமகனாக மாற்றும் கல்வியால் தான் சமுதாய மாற்றத்தை ஏற்படுத்த முடியும். காந்தியடிகள் வகுத்த

கல்விமுறை, மனிதனை முழுவளர்ச்சி பெற்றவனாக்கக் கூடியதாகும். இதன் மூலம் புதிய சமுதாயம் உருவாகும்.

*சிந்திக்க-செயல்பட :*

காந்தியடிகள் நமக்கு அளித்துச் சென்றிருக்கும் சொத்து அவருடைய கருத்துக்களையும்கொள்கைகளையும் கொண்ட தத்துவமாகும். அவர் தமக்கு முன்னால் வாழ்ந்த மகான்கள் கூறிய தத்துவங்களின் சாரத்தை நன்றாக அறிந்திருந்தார். அவற்றைத் தற்கால வாழ்க்கை முறையை ஒட்டி எண்ணிப்பார்த்துப் பயன்படத்தக்க முறையில் புதிய விளக்கங்களோடு கூறினார். அதே நேரத்தில் தனது அறிவாற்றலினாலும், மனித சமுதாயத்தின் மீது கொண்ட அன்பினாலும், உள்ளத்தில் உருவெடுத்த இலட்சிய வேட்கையினாலும் புதிய கருத்துக்களை உருவாக்கி வழங்கியுள்ளார்

காந்தியக் கருத்துக்களும் கொள்கைகளும் நமது சிந்தனைக்கு உணவாகத் தக்கவை. அவற்றை எண்ணிப் பார்த்து ஏற்றுக் கொண்ட நிலையில் நமது வாழ்க்கையில் செயல்படுத்த வேண்டும். நாம் மாறினால் சமுதாயம் மாறும். காந்தியத்தைச் செயல்படுத்தும் பொறுப்பு நம்முடையது. வெற்றி கண்டால் உலகிற்கு வழிகாட்டும் புதிய சமுதாயம் பாரதத்தில் அமையும். இந்த நோக்கத்தோடு காந்திய வாழ்க்கை முறைகளைக் கற்றுப் பயனடைவோம்.

## 2. புதிய போர்முறை

*டாக்டர். ச. பாண்டியன்*

*முன்னுரை :*

உலகம் ஒப்பற்றது. அது புதிய புதியனவற்றைப் புனைந்த வண்ணமேயிருக்கிறது. உலகில் மனிதன் சாதித்த சாதனைகள் ஏராளம். அவன் நிலவிலேயே கால் வைத்தான். தன் சுக வாழ்விற்கு வேண்டியன பலவற்றைப் படைத்தான். காணாதன கண்டான். கேளாதன கேட்டான், சுவையாதன சுவைத்தான். எல்லாவற்றுக்கும் மேலாக நல்லனவற்றை நோக்கி, உண்மையை

நோக்கி அவன் ஆன்மா மேற்கொண்ட நடையே அவனுடைய பெரும் சாதனையாகும். ஆன்மாவின் இன்றையச் சாதனை சத்தியாக்கிரக நெறியாகும். அது அநீதியை எதிர்த்து விலக்க உதவும் ஒரு கருவியாகும். சத்தியத்தை விடாது பற்றி நிற்கும் ஒரு 'வாழும் வகையுமாகும்.

## *அநீதியை அகற்றும் வழிகள் :*

அநீதியை அகற்ற மனிதன் பற்பல வழிகளைக் கண்டிருக்கிறான். அவன் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் வளர வளர விலங்குத் தன்மையைத் துறந்து அன்புவழியில்-அகிம்சை வழியில் பயன்படுத்தப்படும் புத்தம் புதுக் கருவிகளை உருவாக்கினான். புதிய முறைகளை மேற்கொண்டான்.

ஒருவன் அடித்தால், அடித்தவனைக் கடுமையாகத் திருப்பி அடிக்கலாம் என்று தொடங்கினான் மனிதன். தன்னிடமுள்ள உடல் வலிமையால் பெருத்த வன்முறையைக் கையாண்டு அநீதி இழைப்போரை அடக்க முற்பட்டான். பலவானே 'நீதிமான்' ஆனான். சிலகாலம் சென்ற பிறகு ஒருவன் அடித்தால் அவன் அடித்த அளவுக்கு வன்முறையைப் பயன்படுத்துவதே முறையென்று நினைத்தான். ஒரு உதைக்குப் பத்து உதை என்பது போய் ஒரு உதைக்கு ஒரு உதை என்ற முறை உருவாயிற்று. மனிதனை மனிதன் மேலும் அறியத் தொடங்கினான். பண்பாடு வளர்ந்தது. அநீதியை அன்பு வழியிலேயே எதிர்க்கலாம் என்பதைக் கண்டுபிடித்தான்.

அநீதியையும் அநீதி இழைப்பவனையும் வெவ்வேறாகக் காணாத மனிதன் அநீதி செய்பவனை வெறுத்தான். அவன் மேல் கோபம் கொண்டான். அநீதி வேறு, அநீதியை மேற்கொள்ளும் மனிதன் தனி என்பதையும், அநீதியை அவனிடமிருந்து பிரித்து விலக்கிவிட முடியும் என்பதையும் மனிதன் தெரிந்து கொண்ட பிறகு வெறுப்பும் கோபமும் நீங்கின. அநீதி இழைப்பவனிடமும் ஆன்மா இருக்கிறது. அதுவும் பேரான்மாவின் ஒரு பகுதியே என்ற உணர்வு பிறந்த பிறகு அவனுக்குத் தீமை செய்யாமல் அன்பு பாராட்டி அவனிடமிருந்து அநீதி இழைக்கும் தன்மையை விலக்கப்பாடுபட்டான். அங்ஙனம் அநீதியை எதிர்க்கும் போது எதிர்ப்படும் எல்லாத் துன்பங்களையும் மகிழ்வுடன் ஏற்றுக் கொள்ளச் சித்தமானான். அது அநீதி இழைப்போர் உள்ளங்களை மாற்றி உயர்த்தியது.

## *அகிம்சை வரலாறு :*

அன்புவழி-அகிம்சைவழி புதியதன்று. காட்டுமிராண்டியாக வாழ்ந்த மனிதன் அருள் சுரக்கும் மனிதனாக வளரவளர அன்பும் அகிம்சையும் வளர்ந்து கொண்டே வந்துள்ளன.

பசிக்கின்றபோது பார்க்கின்ற விலங்கை அல்லது மனிதனை சிங்கம் அடித்துக் கொல்லும். அதே போல மனிதன் பசிவந்த போது பக்கத்திலிருந்த வேறொரு மனிதனின் உடலையே உண்டிருக்கிறான்! பின்னால் அதற்குக் கூசி வேட்டையாடி விலங்குகளைக் கொன்று தின்றிருக்கிறான். அப்பால் விலங்குகளைக் கொல்வதையும் நிறுத்தத் தொடங்கினான். புத்தர், மகாவீரர் ஆகியோர் அகிம்சையே தர்மத்திலெல்லாம் சிறந்த தர்மம் என்றும், அன்பு வாழ்க்கையே வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை என்றும் எடுத்துரைத்தனர்.

புராண காலத்தில் மனிதர்கள் கூடிச் சிந்தித்து வாழ்வில் இம்சித்தல், போரிடல் முதலிய வேலைகளை ஒரு சிலர் கைகளில் ஒப்படைத்தார்கள். சமூகத்தைக் காப்பாற்ற க்ஷத்திரியர்களையே தீர்த்துக்கட்ட வேண்டும் என்ற கருத்துக்கூடப் பின்னர் எழுந்தது. பரசுராமனின் கதை அதையே குறிக்கிறது. பிறகு முனிவர்கள், அறிவாளிகள் ஆகிய அகிம்சைவாதிகளைக் காப்பாற்ற மட்டும் க்ஷத்திரியர்கள் இம்சையை மேற்கொள்ளலானார்கள். அதற்கடுத்தபடியாக பிரகலாதன் கதையைப் பார்த்தால் எவ்வளவு அச்சுறுத்தியும் துன்புறுத்தியும் கூடத் திருப்பித் தாக்காமல், வன்முறையில் எதிர்க்காமல் கொண்ட கொள்கையை விடாது பற்றி நிற்கும் நிலை உருவானது தெரிகிறது. கடலில் தூக்கியெறியப்பட்ட போதும் அத்துன்பத்தினைத் தாங்கிக் கொண்டு வன்முறையை மேற்கொள்ளாமல், வன்முறை மேற்கொள்ள வல்லோர் துணையையும் நாடாமல் அநீதிக்கு அடிபணியாத அப்பர் அடிகளின் வரலாறு அடுத்த கட்ட வளர்ச்சியை நமக்குக் காட்டுகிறது. அசோகர் போரைத் தவிர்த்தார். ஏசுநாதர் அன்பு வழியைப் போதித்தார். நபிகள் நாயகமும் சமாதான நெறியைக் கற்பித்தார்.

காந்தியடிகள் காலத்தில் அகிம்சைக்கு ஒரு புது எழுச்சி ஏற்பட்டது. அதன் பொருள் மேலும் விரிவடைந்தது. அதன் சக்தி மேலும் விண்டு காட்டப்பட்டது. வெவ்வேறு துறைகளிலும் அதனைப் பயன்படுத்தி அது பலன் தருவதை சோதனை செய்து காட்டப்பட்டது.

தனி மனித வாழ்க்கையின் ஒரு பண்பாக எண்ணப்பட்ட அன்புஅகிம்சை, சமுதாயப் போர்க் கருவியாக உருவெடுத்தது.

தீமையை, தீமையினாலன்றி அன்பினாலேயே எதிர்க்க காந்தியடிகள் வழி கண்டுபிடித்தார்.

*சத்தியாக்கிரகத்தின் தோற்றம் :*

காந்தியடிகளிடம் அகிம்சைக் கருத்து அவர் சிறுபிள்ளையாக இருந்த காலத்தில் தொடங்கி படிப்படியாக வளர்ந்து உருவெடுத்திருக்கிறது.

தாகத்திற்கு நீர் தந்தவருக்கு நீ திரும்ப
நீர் கொடுத்து விடுவதில் பெரிது எதுவுமில்லை
ஆனால் தீமை செய்தார்க்கும் நன்மை செய்வதிலேயே
உண்மைப் பெருமை உண்டு.

என்ற ஒரு குஜராத்திப் பாடல் சிறுவன் மோகன்தாஸ் காந்தியின் உள்ளத்தில் நன்கு பதிந்தது. அவ்வழியில் நடக்க மோகனை அது தூண்டியது.

பின்னால் ஏசுவின் மலைப் பிரசங்கங்களை அவர் படித்தார். அதில் ''தீயவனாய் இருப்பவனை எதிர்க்காதே, உன்னை யாராவது வலது கன்னத்தில் அறைந்தால், இடது கன்னத்தையும் திருப்பிக் காட்டு'' என்று கூறியிருந்ததையும், ''உன்னுடைய விரோதிகளிடமும் அன்பு செலுத்து, உன்னைத் துன்புறுத்துகிறவர் களும் பரலோகத்திலிருக்கும் உன் பிதாவின் மக்களாக வேண்டுமென்று அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்'' என்று சொல்லியிருப்பதையும் பார்த்துப் பேரானந்தம் கொண்டார்.

அடுத்து பகவத்கீதையைப் படித்தபோது அகிம்சை வழி நிற்பதில் அவருக்கு உறுதி ஏற்பட்டது. டால்ஸ்டாய் எழுதிய ''ஆண்டவனின் ராஜ்யம் உன்னுள்ளே '' (The Kingdom of God is within you) என்ற நூல் அதற்கு அவரிடம் நிரந்தரமான உருவையளித்தது.

மோகன்தாஸ் காந்தி வக்கீல் வேலையாக தென்னாப்பிரிக்கா சென்றிருந்தார். அங்கு இனவெறி தாண்டவமாடியது. ரயிலில் பிரயாணம் செய்த போது கருப்பர் முதல் வகுப்புப் பெட்டியில் பயணம் செய்யக் கூடாதென்று மாரிட்ஸ்பர்க் ரயில் நிலையத்தில் அவர் சாமான்களை வெளியே தூக்கி எறிந்து அவரையும் பலவந்தமாக வெளியேற்றி விட்டனர். நடுங்கும் குளிரில் அன்றைய இரவை அந்த ரயில் நிலையத் தங்கும் அறையில் கழித்த போது தான் இனவெறியால் இழைக்கப்படும் அநீதியை எதிர்க்க

வேண்டுமென்று காந்தி முடிவு செய்தார். அன்றைய முடிவே உலகிற்குப் புது நெறியை அளிக்க வழிவகுத்தது.

வெள்ளையரின் இன வெறிச் சட்டங்களை எதிர்த்து காந்தியடிகள் நடத்திய போராட்டம் முன்னேறிக் கொண்டிருந்தது. அதற்கு ஒரு நல்ல பெயர் கண்டுபிடிக்க வேண்டுமென்று அவர் விரும்பினார். அவர் நடத்தி வந்த "இந்தியன் ஒபீனியன்" வாசகர்களுக்கு ஒரு வாய்ப்பளித்தார். அங்கு நடந்த போராட்ட முறைக்கு ஒரு நல்ல பெயர் கண்டுபிடித்துக் கொடுப்பவருக்குச் சிறு பரிசு ஒன்றை வழங்குவதாக அறிவித்தார். மோகன்லால் காந்தி என்பவர் சத் + ஆக்கிரக = “சதாக்கிரக” சொல்லைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தார். ஒரு நல்ல விஷயத்தில் உறுதியோடிருத்தல் என்பதே அச்சொல்லின் பொருள். காந்தி எதிர்பார்த்த முழுப்பொருளும் அச்சொல்லில் இல்லாததால் ''சத்தியாக்கிரகம்'' என்று அச்சொல்லை மாற்றினார். சத்தியம் என்பது நிலைத்த உண்மை . சத்தியத்தில் அன்பு அடங்கிக் கிடக்கிறது. ''ஆக்ரகம்'' என்பது உறுதி. அப்போதிருந்து அகிம்சை வழியில் அநீதியை எதிர்க்கும் போராட்டம் ''சத்தியாக்கிரகம்” என அழைக்கப்படலாயிற்று.

## *கடைசி ஆயுதம் :*

சமூக, பொருளாதார, அரசியல் அநீதிகளை அகற்ற, வேண்டிய மாற்றங்களை மலரச் செய்ய வன்முறை வழிகளைவிட சத்தியாக்கிரக வழியே உயர்ந்து, பயன்தரவல்லது என்பதை காந்தியடிகள் தம் வாழ்நாளில் இம்முறையினைக் கையாண்டு காட்டியிருக்கிறார்.

சத்தியாக்கிரகம் அநீதியை எதிர்க்கும் நேரடி நடவடிக்கையாகும். சத்தியாக்கிரகி நேரடி நடவடிக்கையில் ஈடுபடுவதற்கு முன் சட்டபூர்வமாகக் கிடைக்கும் எல்லா வழிகளையும் மேற்கொள்ள வேண்டும். சத்தியாக்கிரகம் கடைசியாக எடுக்க வேண்டிய ஆயுதம். சட்டபூர்வமான நடவடிக்கைகளுக்கு மாற்று அல்ல அது. சட்டபூர்வமான நடவடிக்கைகள் பலன் தராதபோது துணைக்கு வருவது சத்தியாக்கிரகம்.

## *படிப்படியாக :*

நேரடி நடவடிக்கை எடுப்பதற்கு முன் சிக்கலின் எல்லாப் பக்கங்களும் அலசிப் பார்க்கப்பட வேண்டும். அதன் தன்மைகள் முழுவதையும் அறிந்து கொள்ள வேண்டும். இருதரப்பு

நிலைகளையும் ஆராய்ந்து பார்க்க வேண்டும். (சம்பராண் சத்தியாக்கிரகத்தின் போது உண்மை நிலையை அறிய எடுத்துக் கொள்ளப்பட்ட பெரும் முயற்சி நினைவு கூறத்தக்கது). சமுதாயத்தைப் பாதிக்கும் பெரிய, பொதுவான சிக்கலென்றால் அதனை இவ்வழியில் தீர்க்க முனைய வேண்டும்.

## *பேச்சு வார்த்தை :*

தொடக்கத்தில் எதிர்தரப்பினருடன் பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டும். அவர்களின் கருத்துக்களையும் செவிமடுக்க வேண்டும். எதிர்தரப்பில் நீதி இல்லை என்பதை அவர்களிடம் உணர்த்த முயற்சிக்க வேண்டும். தூதுக் குழுக்கள் அனுப்பலாம்.

## *நடுவர் தீர்ப்பு :*

இருபாலாரும் ஒத்துக்கொள்கின்ற நடுவர் தீர்ப்பிற்கும் சிக்கலை விட்டுவிட வழிவகைகள் செய்யலாம். அகமதாபாத் தொழிலாளர் போராட்டத்தில் இம்முறை கடைப்பிடிக்கப்பட்டதைப் பார்க்கிறோம்.

## *பொது மக்கள் கருத்தை உருவாக்குதல் :*

அப்போதும் அநீதி இழைப்போர் தம் அநீதியை உணரவில்லை யென்றால் பொதுமக்களுக்கு சிக்கலைத் தெளிவாக உணர்த்த வேண்டும். பொதுமக்களும் இத்தீமையை எதிர்க்கும்படி வேண்டிக் கொள்ளலாம். பொதுமக்களின் திரண்ட கருத்து அப்போது உருவாக்கப்படும். மக்கள் கிளர்ந்தெழும் வகையில் மக்களுக்கு அறிவுறுத்த பத்திரிக்கைகள், துண்டுப் பிரசுரங்கள் வெளியிடப்படலாம். ஈர்க்கும் பாடல்களும், கோஷங்களும் பரப்பப்படலாம்.

## *கிளர்ச்சி :*

மக்களின் திரண்ட கருத்து உருவான பின்னும் தீமை செய்பவர் திருந்த வில்லையெனில் கிளர்ச்சியைத் தீவிரப்படுத்தலாம். பெரிய பெரிய பொதுக் கூட்டங்கள், தெருவெங்கும் அநீதியை எதிர்த்து உரையாடல்கள், வீடு, பள்ளி, கடைத்தெரு என எங்கும் ஒரே பேச்சு எழச் செய்யலாம். அதனைத் தொடர்ந்து நீதிகோருவோரின் பலத்தைக் காட்டும் வகையில் ஊர்வலங்கள், பேரணிகளுக்கு ஏற்பாடு செய்யலாம். அவற்றில் தீர்மானங்கள் நிறைவேற்றலாம். பொது வேலை நிறுத்தம் (ஹர்த்தால்) நடத்தப் பெறலாம். அவற்றைத் தொடர்ந்து குறிப்பிட்ட காலக் கெடுவிற்குள்

அநீதி தவிர்க்கப்பட வேண்டுமென்று இறுதி எச்சரிக்கை விடுக்கப்படலாம்.

## *ஆற்றலைப் பெருக்கிக் கொள்ள :*

இப்போதும் சமரசம் ஏற்பட வழிபிறக்கவில்லையென்றால் இனி புரட்சிகரமான செயல்களை மேற்கொள்ள வேண்டிய சூழ்நிலை உருவாகிறது. அதற்குத் தயார் செய்து கொள்ளும் வகையில் சத்தியாக் கிரகிகள் தம்மை மென்மேலும் தூய்மைப்படுத்திக் கொள்ளும் வகையில் நடவடிக்கைகளை மேற்கொள்வார்கள். பொதுப்பிரார்த்தனைகளும் உண்ணா விரதங்களும் தன்னல மறுப்பு உறுதி எடுத்துக் கொள்வதும் இவற்றுள் அடங்கும். தன்னல மறுப்பும் தன்னை வருத்திக் கொள்வதும் பழிவாங்கும் உணர்வில்லாத தன்மையை மாற்றார்க்கு உணர்த்த உதவும்.

## *நேரடி நடவடிக்கை :*

இந்நிலையிலும் நல்ல முடிவுக்கு வரமுடியாது போனால் சத்தியாக்கிரகம் வேறொருபடிக்கு முன்னேறுகிறது. உருவாக்கப்பட்டுள்ள சத்தியாக்கிரக சபைகள் பயிற்றுவிக்கப்பட்ட தொண்டர்களை நேரடி நடவடிக்கையில் ஈடுபடுத்தும். (சான்று : உப்புச் சத்தியாக்கிரகம்).

நேரடி நடவடிக்கை பலவிதமான வகைகளில் அமையலாம். வாழ்வின் பல்வேறு துறைகளிலும் அது மேற்கொள்ளப்படலாம். தொழில் துறையில், வேலை நிறுத்தங்களும் மறியல்களும் பொது வேலை நிறுத்தங்களும் நடைபெறலாம். விவசாயத் துறையில் வரிகொடா இயக்கம், இடம் பெயர்தல் முதலியனவும், மொத்த பொருளாதாரத் துறைகளில், பொருளாதார பகிஷ்காரமும் மேற்கொள்ளப்படலாம். அரசியல் துறையில், ஒத்துழையாமை, சட்ட மறுப்பு, போட்டி அரசு நடத்தல் முதலிய நடவடிக்கைகளைக் கைக் கொள்ளலாம்.

## *வைக்கம் சத்தியாக்கிரகம் :*

அகிம்சை வழியில் மேற்கொள்ளப்பட்ட நேரடி நடவடிக்கை ஒன்றை நாம் நினைவு கூறலாம். வைக்கம் போராட்டம் அகிம்சை வழியில் நடைபெற்ற அத்தகையதொரு நடவடிக்கை.

கேரளாவில் திருவாங்கூர் பகுதியில் உள்ளது வைக்கம் என்னும் சிற்றூர். 1924-25ஆம் ஆண்டுகளில் அங்கு சமூக நீதி கோரி நடைபெற்ற போராட்டமே வைக்கம் சத்தியாக்கிரகம்.

இக்கிராமத்தில் கோவிலுக்குச் செல்லும் பெருவழியில் ''தீண்டத்தகாதோர்'' செல்லக்கூடாதென்று தடைசெய்யப் பட்டிருந்தனர். தாழ்த்தப்பட்ட மக்கள் தத்தம் குடிசைகளுக்கு வெகுநேரம் நடந்து தொலைவான வழியில் செல்ல வேண்டியிருந்தது. மனிதர்களிடையே உயர்வுதாழ்வு கற்பித்து ஒரு சாராரின் உரிமையைப் பறித்த இந்தத் தடையை அகற்ற வேண்டுமென்ற நோக்கத்துடனும் அதன் மூலம் தீண்டாமை என்னும் பாவத்தை விலக்க முயலவும் இப்போராட்டம் நடத்தப்பட்டது.

''உயர்'' மனப்பான்மையுடைய சாதி இந்துக்களின் கொள்கைப் போக்கினை எதிர்த்து, தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சம உரிமை வழங்கக் கோரி நடைபெற்ற இப்போராட்டத்திற்கு சாதி இந்துக்களே தலைமை ஏற்றனர். தாம் கலந்து கொள்ள முடியாவிட்டாலும் தூரத்திலிருந்தவாறே வழிகாட்டிக் கொண்டிருந்தார் மகாத்மா காந்தி.

ஆயிரக்கணக்கான தொண்டர்கள் இப்போராட்டத்தில் பங்கு கொண்டனர். நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்து தொண்டர்கள் திரண்டனர்.

சாதி இந்துக்கள் மறுபக்கம் இருந்தனர். சவர்ணமகாஜன சபையும் திருவிதாங்கூர் அரசுக்காவல்படையும் அவர்களுக்குத் துணை நின்றன.

தொண்டர்கள் முகாம் வாழ்க்கையை மேற்கொண்டனர். நூல் நூற்றல், பள்ளிக்கூடம் கட்டுதல் முதலிய ஆக்கபூர்வமான செயல்கள் மேற்கொள்ளப் பட்டன. பிரார்த்தனைக்கூட்டங்கள் நடைபெற்றன. போராட்டநெறி பற்றியும் எதிர்த்தரப்பினரின் கருத்துக்கள் பற்றியும் விவாதங்கள் மேற்கொண்டனர். அகிம்சை வழியில் எதிர்த்தரப்பினை இணங்கச் செய்து வெற்றி கொள்வதன் முக்கியத்துவம் வலியுறுத்தப்பட்டது.

சிக்கலைத் தீர்க்க ஒரு குழு அரசாங்கத்துடன் பேச்சுவார்த்தை நடத்த முயன்றது. முன்னோடி வேலையாக வைக்கத்திலுள்ள தீண்டத்தகாதவர் படும் துன்பங்கள் பொதுமக்களின் கவனத்திற்குக் கொண்டு வருவதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன.

போராட்டத்தின் முதல் கட்டமாக தொண்டர்கள் (சாதி இந்துக்களும் தீண்டத்தகாதவர் எனப்பட்டவர்களும்) தடை செய்யப்பட்ட சாலைக்குள் ஊர்வலமாகச் சென்றனர். இதனை எதிர்த்தவர்கள் இவர்களை அடித்து நொறுக்கிய போது இவர்கள் திருப்பித் தாக்கவில்லை. தலைவர்களும் தொண்டர்களும் தொடர்ந்து பொறுப்பேற்றுக் கொண்டனர். இரண்டாம் நிலைத் தலைவர்களும் கைது செய்யப்பட்டனர்.

இரண்டாம் கட்டமாக, காவலரின் காவல் தடையை மீற முயற்சி செய்யப்பட்டது. சாலையில் மேலும் முன்னேற முடியாமல் காவல் துறையினர் தடுத்து நின்ற போது தொண்டர்கள் அவர்கள் முன் நின்று கொண்டு அவர்களுடன் விவாதித்தனர். மேல் நோக்கிச் செல்ல முனைந்தனர். நாள் முழுவதும் பல நாட்கள் தொடர்ந்து தொண்டர்கள் மாறிமாறி நின்று கொண்டனர். பருவமழை பெய்து சாலையில் கழுத்தளவு தண்ணீர் நின்ற போதும் தொண்டர்கள் அகலாமல் அங்கேயே நின்றனர். மூன்று மணி நேரம் ஒவ்வொரு தொண்டர் குழுவும் படகுகளில் நின்ற காவலருக்கு எதிரே சாலையில் முன்னேறும் நோக்குடன் நின்றது.

மூன்றாவது கட்டமாக, அரசுடன் பேசி தடையை அகற்றுமாறு காந்தியடிகள் கோரினார். அவர் கோரிக்கைக்கு இணக்கம் தெரிவிக்கப் பட்டது. காவல்துறை அமைத்திருந்த தடைகள் விலக்கப்பட்டுவிட்ட போதும் தொண்டர்கள் அச்சாலையில் செல்லவில்லை. முன்னர் எதிர்த்த சாதி இந்துக்கள் முழுமையும் இணங்கினாலொழிய, தாழ்த்தப்பட்டவர்கள் அச்சாலையைப் பயன்படுத்துவதை அரசு அனுமதித்து அறிவித்தாலொழிய அச்சாலையில் செல்வதில்லை எனச் சொல்லாதிருந்தனர். தொடர்ந்து பிரார்த்தனை பலனைத் தந்தது. சாதி இந்துக்கள் மனம் மாறித் தொண்டர்களின் வேண்டுகோளை ஏற்றனர். காவல்துறையினர் விலகிய பிறகும் தொண்டர்கள் சாலையில் தாமாக முன்னேறாதது அவர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. தாழ்த்தப்பட்டவர்களையும் தெருவில் அனுமதிப்பதாக அறிவித்தனர்.

இப்போராட்டத்தின் விளைவாகத் தெருக்களும், கோவில்களும் அனைவருக்கும் திறந்துவிடப்பட்டன. தீண்டாமை ஒழிப்புப் போராட்டத்தில் ஒரு முக்கிய திருப்பு முனையாக இது அமைந்தது. அகிம்சை வழியிலேயே தீமை விளைவிப்பவர் மீது வெறுப்பு இல்லாமல் அவர்களைத் துன்புறுத்தாமல் தமக்கு விளைவித்த துன்பங்களை மகிழ்ச்சியுடன் ஏற்று கடைசிவரை தமது சத்தியத்தை விடாது பற்றி உறுதியுடன் நின்று போராடி,

சமூகக் கொடுமையை வெற்றியுடன் விலக்கிய போராட்டம் வைக்கம் போராட்டமாகும்.

வெளிநாடுகள் பலவற்றிலும் பெரியோர் பலர் இம்முறையைக் கையாண்டு தத்தம் நாடுகளில் அகிம்சை வழிப் போராட்டங்களை நடத்தியுள்ளனர். சத்தியாக்கிரகத்தின் சக்தியினை அத்தலைவர்கள் வியந்து போற்றியிருக்கிறார்கள்.

வன்முறை நடைமுறை சாத்தியமற்றது. ஏனெனில் ''கண்ணுக்குக்கண்'' எனும் தத்துவம் அனைவரையும் குருடராக்கி விடுகிறது. அது ஒழுக்கங்கெட்ட நெறியாக இருக்கிறது. அநீதி செய்பவரை மாற்றுவதை விட்டுவிட்டு அவரை அழித்து விடுகிறது. எனவே அம்முறை தவறான முறையாகும். எனவே சுதந்திரத்திற்கும் நீதிக்குமான போராட்டத்தில் அகிம்சையே பலமிக்க ஆயுதமாக இருக்க முடியும் என்றார், அமெரிக்கக் காந்தி மார்ட்டின் லூதர்கிங். தென்னாப்பிரிக்கத் தலைவர் ஆல்பர்ட் லுதுலி, நோபல் பரிசு பெற்ற சமாதான வீரர். கருப்பர்களின் உரிமைகளுக்குப் போராடிய அவர், இவ்வாறு கூறினார்: ''சுதந்திரத்திற்காக அன்புவழியில் அமைதியான வழியில் எதிர்த்தலையே நான் மேற் கொண்டதற்குக் காரணம் அது ஒன்றே சரியான, மனித வழியாகும்".

## 3. வாழ்க்கைக் கல்வி

*மகரிஷி க. அருணாசலம்*

மகாத்மா காந்தி இப்புவனம் பெற்றெடுத்த தலைசிறந்த புரட்சியாளர் களுள் ஒருவர். மனிதனின் ஆளுமை வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் எவையெல்லாம் தடையாக இருந்தனவோ அவற்றையெல்லாம் எதிர்த்து அவர் புரட்சி செய்தார். மாற்றத்திற்குத் தடையாக இருக்கும் தற்போதைய சமூகக் கோட்பாடுகளின் விலங்குகளிலிருந்து தம்மையும் மற்ற மானிட, வர்க்கத்தினரையும் விடுவிக்கப்பாடுபட்டார்.

அப்போதைய கல்வித் திட்டம் வெறும் நூலறிவை நோக்கமாகக் கொண்டது. இயல்பான வளர்ச்சிக்கு எதிராகவும், இடத்துக்கும் காலத்துக்கும் வளைந்து கொடுக்காத தன்மையதாகவும், உயிரற்றதாகவும் ஒரே மாதிரியாகவும் இருந்தது. பலதரப்பட்ட மாணவர்களுக்கும், ஒரு மாணவனின் பல்வேறு வகையான திறமைகள் செயல்படுவதற்கும் அக்கல்வித்திட்டம்

உதவியாக இல்லை. பயனுடைய குடிமக்களாக உருவாக்குவதற்கு அடிப்படையான ஒழுக்கம், கூட்டுறவுணர்ச்சி, தலைமைப்பண்பு ஆகியவற்றையும் அக்கல்வித்திட்டம் வளர்க்கவில்லை. தேர்வுக்குக் கொடுத்த அதிக முக்கியத்துவம், அளவுக்கு மீறிய பாடங்கள், கல்வி கற்பித்த முறை, குறைந்த உபகரணங்கள் ஆகிய எல்லாமாகச் சேர்ந்து, மகிழ்ச்சியான அனுபவத்தை நல்க வேண்டிய கல்வியைப் பெரும் சுமையாக்கிவிட்டன. பழைய கல்வித்திட்டம் குழந்தைகளின் சூழ்நிலைக்குக் கொஞ்சம் கூடத் தொடர்பில்லாதது என்பதைத் தம் வாழ்நாளின் தொடக்க நாட்களிலேயே காந்தியடிகள் உணரலானார். நாட்டின் எண்ணிக்கையில் மிக மிகக் குறைவான ஒரு சில சிறுவர் சிறுமியர் மட்டுமே பெற்று வந்த அக்கல்வியினால் சூழ்நிலையும் சிறிதுகூட மாறவில்லை . எனவே தான், அவர் அப்போதைய கல்வித் திட்டத்தை எதிர்த்துப்புரட்சி செய்தார். நடைமுறையிலிருந்த கல்வித்திட்டத்தை எதிர்த்துப் புரட்சி செய்ததோடு அவர் அமையவில்லை. தாம் நினைத்த கல்வித் திட்டத்திற்கு இயைந்த முறையில், பழைய திட்டத்தில் தேவையான மாறுதல்களைச் செய்வதற்குப் பல வகையிலும் அவர் முயற்சி செய்து வந்தார். அவர் கருத்துப்படி, குழந்தை அல்லது மனிதனின் உடல், உள்ளம், ஆன்மா ஆகிய எல்லாவற்றின் நற்பண்புகளையும் வெளிக்கொணர்வதே கல்வியாகும்.

வேறு எப்பணியையும் விட ஆசிரியராக இருப்பதையே தாம் மிகவும் விரும்புவதாகப் பிற்காலத்தில் அண்ணல் அடிக்கடி கூறி வந்தார். அவரிடம் சிறுவர் முதல் தள்ளாத வயோதிகர் வரை எல்லோரும் கல்வி கற்றனர். அவர் கல்வி கற்பிக்க, வயது ஒரு நாளும் தடையாக இருந்ததில்லை. அவர் கல்வி புகட்டிய முறை பல்வேறு பயன்களை நல்கிய ஒரு சிறந்த கலை, அவர் பாடம் கற்பித்தார். ஒழுக்கம் புகட்டினார். சமய போதனை செய்தார். பிரசாரம் செய்தார். கட்டுப்பாட்டில் நிலையாக இருக்கச் செய்தார். இவை யாவற்றையும் ஒரே சமயத்தில் ஒரே முறையிலேயே செய்தார்.

## *வீட்டிலும் பள்ளியிலும் கல்வி :*

காந்தியடிகளுக்குப்ப தின் மூன்றாம் வயதிலேயே திருமணமாயிற்று. அந்த வயதிலேயே அவருக்கு தம்முடைய மனைவியையும் தம்மைப் போலவே தூய்மையாக வாழப் பயிற்ற வேண்டும், தாம் கற்றுள்ளதெல்லாம் அவருக்கும் கற்பித்து விடவேண்டும், தம்முடைய கருத்து, வாழ்க்கைமுறை ஆகியவற்றிற்கு ஏற்றபடி அவரையும் நடக்கச் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் மேலோங்கியிருந்தது. ஆயினும், பல்வேறு

காரணங்களினால் அவருக்குக் கற்பிக்கத் தேவையான நேரம் ஒதுக்க காந்தியடிகளால் இயலாமற்போயிற்று. கஸ்தூரிபாயும் கல்விபயில்வதில் மிகுந்த ஆர்வம் காட்டவில்லை. இதன் காரணமாக கஸ்தூரிபாவினால் குஜராத்தி மொழியில் மிகக் குறைந்த அளவே படிக்கவும் எழுதவும் முடிந்தது.

குழந்தைகளைப் பெற்றோரிடமிருந்து பிரிக்கக் கூடாது என்று காந்திஜி கருதினார். ஒரு நல்ல குடும்பத்தில் குழந்தைகள் இயல்பாகவே பெறக்கூடிய கல்வியை மாணவர் விடுதிகளில் பெறமுடியாது என்பது அவர் கருத்து. ஆகவே 1897-ல் தென்னாப்பிரிக்காவில் டர்பனில் அவர் குடும்பம் நடத்தத் தொடங்கிய போது தம் குழந்தைகளையும் தம்முடனேயே வைத்துக் கொண்டார். இந்தியாவிலும் கூட அவர் உலாவச் செல்லும் போது குழந்தைகளைத் தம்முடன் அழைத்துச் சென்று அவர்கட்குக் கதைகள் சொல்லி விவாதங்கள் நடத்துவதுண்டு.

தாம் விரும்பிய அளவு அவர்களுக்கு இலக்கியப் பயிற்சி அளிக்க முடியவில்லையே என்று அவர் எப்போதும் வருந்தினார். பிற்காலத்தில் தம்மைப் பொதுப்பள்ளிக்கூடங்களில் படிக்க வைக்கவில்லையே என்று அவர் குழந்தைகள் அவரிடம் புகார் செய்தபோது தாம் செய்ததே சரி என்று அவர்களிடம் அண்ணல் வாதாடினார். ஆங்கிலேயர் அல்லது தென்னாப்பிரிக்கர் நடத்திய பொதுப்பள்ளிகளில் அவர்கள் படித்திருந்தால், பிற்காலத்தில் அவர்கள் காட்டிய சேவை ஆர்வம், எளிமை ஆகியவற்றை ஒருநாளும் பயின்றிருக்கவே முடியாது என்று கூறினார். பழைய முறையிலேயே பயின்றதன் காரணமாகவும் காந்திஜியுடன் அதிக நாள் தங்காததாலும் அவர் மூத்த மகன் அவர் எதிர்பார்த்த அளவு முன்னேற முடியவில்லை. மற்ற மூன்று மக்களின் வாழ்க்கை குறிக்கோள் பொறுத்தவரை காந்தியடிகள் மிகவும் திருப்தியே அடைந்தார். நல்ல ஒழுங்கான குடும்பத்தில் பெறக்கூடிய கல்வி மற்ற பள்ளிகளில் பெறக்கூடிய கல்விக்கும் உள்ள வேறுபாட்டைக் காந்தியடிகள் மிகத் தெளிவாகக் கண்டார். அத்துடன், பெற்றோர் தம் வாழ்வில் அனுசரிக்கும் மாறுதல்கள் எவ்விதம் குழந்தைகளையும் ஆட்கொள்கின்றன என்பதையும் அவர் நன்கு கண்டார்.

### *ஆசிரியர் வேலையை நாடி :*

காந்திஜி பம்பாயில் வழக்கறிஞர் பணி ஆற்றத் தொடங்கி அதில் போதிய வருவாய் கிட்டாது எனக் கண்டதும் ஆசிரியர்

வேலைக்குப் போய் விடலாம் என எண்ணினார். அவருக்கு நல்ல ஆங்கில ஞானம் இருந்தது. ஏதாவதொரு பள்ளியில் மெட்ரிகுலேஷன் மாணவர்களுக்கு ஆங்கிலம் போதிக்க அவர் விரும்பினார். மாதம் ஒன்றுக்கு 75 ரூபாய் சம்பளத்தில் ஆசிரியர் ஒருவர் தேவை என்ற விளம்பரத்தைக் கண்ணுற்று அந்த வேலைக்கு விண்ணப்பித்தார். நேரில் வருமாறு அழைப்பு வந்தது. புகழ் பெற்ற அப்பள்ளியின் முதல்வர், 'காந்திஜி பட்டதாரி அல்லர்' என்ற காரணத்தால் அவருக்கு ஆசிரியர் வேலை கொடுக்க மிக்க வருத்தத்துடன் மறுத்து விட்டார்.

## *திறமையைப் பகிர்ந்து கொள்ளுதல் :*

தம்மிடம் இருப்பதை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற பெருவிருப்பம் கொண்டவராதலின், கற்பிக்கவோ கற்கவோ தமக்கு கிடைத்த வாய்ப்பினை காந்திஜி தவறவிட்டதில்லை . கல்வி கற்க, வயது முதிர்ச்சி ஒரு தடையல்ல என்று அவர் நம்பினார். பிரிட்டோரியாவில் அவர் ஆற்றிய முதல் சொற்பொழிவிலேயே, ஆங்கிலம் கற்பதற்கு யாரேனும் விரும்பினால் தாம் வகுப்பு நடத்துவதற்கோ அல்லது தனிப்பட்ட முறையில் பாடம் சொல்லித்தர காந்திஜி ஒப்புக் கொண்டார். தாம் செல்கையில், அவர்கள் தத்தம் வேலையில் ஈடுபட்டிருந்தாலும் கூட அவர் பொறுமையிழந்ததில்லை. காத்திருந்து அவர்கட்குக் கற்பிப்பார். எட்டு மாதங்களில் இருவர் நன்கு கற்றுக்கொண்டனர். கணக்கு வைத்துக் கொள்ளவும், சாதாரண வியாபாரக் கடிதங்கள் எழுதவும் போதிய அளவு அவர்கள் கற்றுக் கொண்டனர். ஆனால் மூன்றாமவரான நாவிதரோ தம்முடைய வாடிக்கைக்காரர்களிடம் உரையாடுவதற்குத் தேவையான அளவு மட்டுமே ஆங்கிலம் கற்றுக் கொண்டார்.

காந்தியடிகள் உலகில் உள்ள எல்லா உயிர்களுக்கும் பொருள்களுக்கும் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட மகான். அதனால் அவர் வாழ் நாளிலேயே மகாத்மா என்று உலகமெல்லாம் அவரைப் பாராட்டி உரிமை கொண்டாடியது.

## *டால்ஸ்டாய் பண்ணையில் ஆசிரியர் பணி :*

தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம் நடைபெற்று வந்தபோது, சிறை சென்ற சத்தியாக்கிரகிகளின் குடும்பத்தினரைப் பராமரிக்க காந்தியடிகள் இல்லம் ஒன்று தொடங்கினார். டால்ஸ்டாய் பண்ணை தொடங்கி அங்கு பல குடும்பத்தினருக்கு இடமளித்தார். குடும்பங்களின் எண்ணிக்கை

மிக மிக, சிறுவர் சிறுமியரின் எண்ணிக்கையும் அதிகரித்ததால் அவர்களுக்குக் கல்வியளிக்கும் பிரச்சினை எழுந்தது. ஏறத்தாழ 1912ஆம் ஆண்டில் நிகழ்ந்தது இது. நடைமுறையில் இருந்த கல்வி அவருக்குப் பிடிக்கவில்லை. எனவே சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, அனுபவங்கள் சோதனைகள் வாயிலாக உண்மையான கல்வித் திட்டத்தைக் காண அவர் முடிவு செய்தார். தகுதி வாய்ந்த இந்திய ஆசிரியர்கள் கிடைக்காததால் சிறுவர் சிறுமியர்க்குப் பயிற்சியளிக்கும் பொறுப்பைத் தாமே மேற்கொண்டார்.

அவருடைய கல்வித் திட்டத்தில், மனத்திற்குப் பயிற்சியளித்து ஒழுக்கத்தை வளர்ப்பதற்கே முதலிடம் அளித்தார். ஒழுக்கத்தை வளர்ப்பதே குழந்தைக் கல்வியின் சரியான அடிப்படை என்று அவர் கருதினார். இதற்கு மட்டும் நாம் சரியான ஏற்பாடு செய்து விட்டால், குழந்தைகள் தாமாகவோ நண்பர்களின் துணை கொண்டோ மற்ற யாவற்றையும் கற்றுக் கொள்வார்கள் என்பது அவர் துணிவு.

டால்ஸ்டாய் பண்ணையில் வேலைக்காரர் என்று யாரும் இல்லை. அங்கு வசித்த சிறுவர்கள், பெரியவர்கள் ஆகிய அனைவரும் தத்தம் திறமைக்கேற்ப வேலைகளைப் பகிர்ந்து கொண்டு செய்ய வேண்டும். எனவே வேலை செய்வதற்கு ஒவ்வொருவருக்கும் வாய்ப்புக் கிட்டியது. இத்துடன் ஒவ்வொருவருக்கும் செருப்புத் தைத்தல், தச்சு வேலை போன்ற பயனுடைய ஏதாவதொரு உடலுழைப்புத் தொழிலும் கற்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. சிறுவர் சிறுமியர் இலக்கியப்பயிற்சி பெறுவதற்கும் காந்திஜி ஏற்பாடு செய்தார். ஆன்மப் பயிற்சியைப் பொறுத்தவரை, ஒழுக்கத்தை வளர்ப்பதே ஆன்மாவை வளர்க்கும் வழி. அதுவே கடவுளைப் பற்றியும், தன்னைப் பற்றியும் முழுமையாக அறிய வழிவகுக்கும் என்பது காந்தியடிகளின் கருத்து. இளைஞர்களுக்கு அளிக்கும் பயிற்சியில் இது முக்கியமான பகுதி என்று அவர் கருதினார். குழந்தைகள் தெய்வீக பாடல்களை மனப்பாடம் செய்யவும் ஒப்புவிக்கவும் தூண்டினார். நீதிநெறிகளை விளக்கும் நூல்களை அவர்களுக்குப் படித்துக் காட்டினார். ஆனால் இவை யாவும் அவருக்குத் திருப்தியளிக்க வில்லை. மாணவர்களுடன் நெருங்கிப் பழகப்பழக, புத்தகங்களின் மூலம் ஆன்மப்பயிற்சியை அளிக்க முடியாது என்பதைக் கண்டார். எவ்விதம் உடலுக்கும், அறிவுக்கும் பயிற்சி அளிப்பதன் மூலம் உடலையும் அறிவையும் வளர்க்கிறோமோ அவ்விதமே ஆன்மாவுக்கும் பயிற்சியளிக்க வேண்டும் என்று கண்டார். காந்தியடிகளின் கருத்துப்படி,

ஆன்மாவுக்குப் பயிற்சி அளிப்பது என்பது ஆசிரியர்களின் வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் பொறுத்ததாகும். காந்திஜி தம்முடன் வாழ்ந்த சிறுவர் சிறுமியர்கட்குத் தாம் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்க வேண்டும் என்பதற்காகத் தாம் எவ்விதம் ஒழுங்கையும் புலனடக்கத்தையும் மேற் கொண்டொழுகினார் என்பது பற்றி சுயசரிதையில் விவரித்துக் கூறுகின்றார்.

## *இந்தியாவில் சோதனை :*

இந்தியாவிலும் அவருடைய சோதனைகளைத் தொடர்ந்து செய்து வந்ததன் காரணமாக, கல்வி பற்றிய காந்தியடிகளின் கருத்து மேலும் விளக்கம் பெற்றது. பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவில் புகுத்திப் பரப்பிய வெறும் ஏட்டுக்கல்வி அவருக்கு வெறுப்பளித்தது. அது தன் முயற்சியையோ பொருள் உற்பத்தி செய்வதில் திறமையையோ வளர்ப்பதற்கு என்று அல்லாமல் அரசாங்கத்துக்குக் குற்றேவல் செய்யும் பணியாளர்களை உற்பத்தி செய்வதற்கென்றே திட்டமிட்டு . அமல் செய்யப்பட்டதாகும். அக்கல்வி கற்றவர்களைப் பொது மக்களிடமிருந்து பிரித்து வைத்தது மட்டுமல்லாமல், பொது மக்களுக்கு யாதொரு பயனையும் அளிப்பதில்லை என்பதையும் காந்திஜி கண்டார். பிரிட்டிஷார் நம்முடைய பண்டைக் கிராம சமுதாய அமைப்பை அழித்து, வெளிநாட்டுப் பொருட்களைக் கிராமங்களில் திணித்ததனால் கிராம மக்கள் சிதறுண்டு, வேலையிழந்து ஏழ்மையிலும் தாம் பெற்ற கல்வியை ஏழை. மக்களின் வாழ்வைப் பலியிட்டும் கூட தம்முடைய சுயநலனுக்கான கருவியாகவே கருதி வந்தனர். இத்தகைய சூழ்நிலையில் கிராமப் பொருளாதார வாழ்வைப் புதுப்பித்து கல்வியையும் அதனோடு இணைப்பதே நாட்டுக்குச் சேவை செய்ய ஏற்ற வழி என்று காந்திஜி கருதினார். எனவே கிராமக் கைத்தொழில்களை அடிப்படையாகக் கொண்டு கல்வி நடைபெற வேண்டும் என்றாயிற்று. பொருள் உற்பத்தி செய்வதில் குழந்தைகளுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. பொருளாதார உற்பத்திக்கு ஒரு கருவி என்ற அளவில் மட்டும் குழந்தைகளின் கல்வி இருப்பதை காந்திஜி விரும்பவில்லை. தொழிலை அடிப்படையாகக் கொண்ட கல்வியில், குழந்தைக்குக் கைத்திறன் பயிற்சி கிடைக்கிறது. அதே நேரத்தில் அறிவு, மனவளர்ச்சிக்கான பயிற்சியையும் கல்வி அளிக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். இதுவரை அந்நியமொழியில் கற்றுவந்த, வாழ்க்கைக்குச் சற்றும் தொடர்பில்லாத கல்விக்குப் பதிலாக,

குழந்தையின் தாய்மொழியில் அதன் சமூக, கலாசார சூழ்நிலைக்கும் பொருத்தமாகக் குறிக்கோளுடைய கல்வியை அளிக்கும் வகையில் சோதனை அமைந்தது.

## *ஆதாரக் கல்வி :*

சுதந்திரத்துக்கு முன்னோடியாக, மாநிலங்களில் காங்கிரஸ் மந்திரிசபைகள் அமைந்தபோது, காந்திஜி தம் வாழ்நாளில் சுமார் முப்பது ஆண்டுகட்கு மேலாகத் தாமே சோதனை நடத்தியும் தம் சொந்த அனுபவத்தின் வாயிலாகவும் கண்டுபிடித்த தம்முடைய கல்விக் கொள்கைகளை நாட்டு மக்களின் முன் வைத்தார். இவ்விதமாகத் தான் 1937ஆம் ஆண்டு தொழில் மூலம் கல்வி என்ற மிகப் புரட்சிகரமான ஆதாரக் கல்வி தோன்றியது.

## *தொழில் மூலம் பயிற்சி :*

இப்புதிய கொள்கையை அறிமுகப் படுத்தி அண்ணல் கூறியதாவது : "'நூற்பு, பட்டைபோடுதல் போன்ற கிராமக் கைத்தொழில்களின் மூலம் ஆரம்பக்கல்வி புகட்டுதல் என்ற என்னுடைய இத்திட்டம், மிகப்பெரிய விளைவுகளை உண்டாக்கவல்ல அமைதியான சமூகப்புரட்சிக்கு முன்னோடியாகும். இது நகரத்துக்கும் கிராமத்துக்கும் இடையே சிக்கலற்ற, தார்மீக நல்லுறவை உண்டாக்கும். சமூகப் பாதுகாப்பின்மை, வர்க்கவேற்றுமை போன்ற தற்போதைய தீமைகள் பலவற்றை நீக்குவதற்கு இது வழிவகுக்கும். கிராமங்களை அழிவிலிருந்து பாதுகாத்து நீதியை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்புக்கு அடிகோலும். இந்த சமூகத்தில், ஒவ்வொருவருக்கும் வாழ்க்கைக்குத் தேவையான ஊதியமும், சுதந்திரமாக வாழ உரிமையும் இருக்குமாதலின் உடையவர், இல்லாதவர் என்ற செயற்கைப் பாகுபாடு இராது. இவையாவும் வன்மையான வர்க்கப் போராட்டம் அல்லது பெரும் முதலீடு செய்து இயந்திரமயமாக்குதல் போன்ற தீமை எதுவுமில்லாமலே நிறைவேறும். அந்நிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் இயந்திரங்களோ, தொழில் நிபுணர்களின் உதவியோ இதற்குத் தேவையில்லை. விசேஷமான செயல்திறன் எதுவும் தேவைப் பட்டால் மக்களையே அணுக வேண்டும். இத்தகைய திறமைகள் ஏற்கனவே நம் மக்களிடமிருந்து வந்தவைதாம்''.

## *வாழ்க்கை முறை :*

சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட சமூகப் புரட்சியை உண்டாக்குவதற்கு ஆதாரக் கல்வி மிகவும் இன்றியமையாதது என்பது காந்தியடிகளின் நம்பிக்கை. ஆதாரக் கல்வி என்பது வாழ்க்கையின் மூலமே வாழ்ந்து கற்கும் ஒரு வாழ்க்கை முறையாகும். இது பிறப்பு முதல் சாவு வரை நீடிக்கும் ஓர் அரிய கலை. தானாகவும் மற்றவர்களுடன் கூடியும் செயலாற்றி, பலம் பொருந்திய சிறிய சமுதாயங்களின் சிறந்த குடிமக்களாவதற்கு குழந்தைப் பருவத்திலிருந்தே மக்களுக்குப் பயிற்சியளிப்பது இக்கல்வி முறை. இதன் மூலம் அவர்களின் சொந்தத் தேவைகளும் பொதுத் தேவைகளும் பூர்த்தியாகி அழகிய, சக்தி வாய்ந்த ஆன்மீக வாழ்வுக்கு அடிப்படை ஏற்படும்.

## *வேலையின்மைக்கு எதிரான பாதுகாப்பு:*

படித்தவர்களுக்கும், தன் உடலுழைப்பின் மூலம் பண்ணைகளிலும் தொழிற்சாலைகளிலும் பணியாற்றும் பாமர மக்களுக்கும் இடையே உள்ள பெருத்த வேறுபாட்டைப் போக்குவதற்குக் காந்திஜி பெரிதும் விரும்பினார். நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் ஏதாவது பொருளுற்பத்தி செய்ய வேண்டும் என்றும், அப்பணியின் மூலமே விரைவில் சிறந்த கல்வியறிவு பெற வேண்டுமென்றும் அவர் விரும்பி தவறாகப் புரிந்து கொண்டனர். மற்ற பாடங்களுக்கெல்லாம் பதிலாக, அவர் உடலுழைப்பை வற்புறுத்தினார் என்று அவர்கள் கருதினர். எனவே "ஹரிஜன்" இதழில் அவர் ஒவ்வொரு வாரமும் இதைப்பற்றி விளக்கி எழுத வேண்டி நேரிட்டது. அவர் ஒருமுறை எழுதினார். ''நம் தேசியக் கல்வியில் அறிவுப் பயிற்சியைச் சரியாகத் தூண்டுவதற்கே கைவினைப் பயிற்சிதான் சரியான சாதனம் என்று இப்போது உணர்கிறேன். நம் குழந்தைகளின் அறிவெல்லாம் பாழாவதைக் கண்டுதான் நான் இம்முடிவுக்கு வந்தேன். பள்ளிக்கூடங்களை விட்டு வெளி வந்தவுடன் என்ன செய்வது என்றே அவர்களுக்குத் தெரிவதில்லை. நல்ல கல்வி என்பது குழந்தைகளிடம் அமைந்துள்ள ஆன்ம அறிவு, உடற்பண்புகளை வெளிக் கொணர்வதும் இணக்குதலுமேயாம். இக்கல்வி வேலையின்மைக்கு மாறாக அவர்களுக்குப் பாதுகாப்பளிப்பதாக இருக்கும்''.

## *ஆசிரியர் :*

ஆதாரக்கல்வியில் ஆசிரியர் ஆற்ற வேண்டிய பங்கு மிக முக்கியமானதாகும். எனவே அதற்கேற்ப அவர் தம்மைத் தகுதியுடையவராக்கிக் கொள்ள வேண்டும். பார்க்கப் போனால் எந்தவிதமான கல்வி முறையிலுமே ஆசிரியரின் பங்கைக் குறைத்து மதிப்பிட இயலாது. ஆனால் இது ஓர் வாழ்க்கை முறையாதலாலும் புதிய சமுதாயத்தை உருவாக்கும் பெரும் பொறுப்பு ஆசிரியரிடமே ஒப்படைக்கப்படுவதாலும் ஆதாரக்கல்வியில் ஆசிரியருக்குள்ள பங்கு மிகவும் மகத்தானதாகும். புதிய வாழ்க்கை மதிப்பீடுகளைத் தம் சொந்த வாழ்வில் அனுசரிப்பதன் மூலமே அவர் இத்தகுதியை அடைய முடியும். எனவே ஒரு நிர்மாண ஊழியருக்கு வகுக்கப்பட்டுள்ள அனைத்துத் தகுதிகளையும் இவர் பெற வேண்டும். சமுதாயத்தில் இப்பண்புகள் நிலவ வேண்டும் என எதிர்பார்ப்பதால் தம் சொந்த வாழ்வில் இவற்றை இவர் கடைப்பிடித்தொழுக வேண்டும். வேறுவிதமாகச் சொன்னால் உண்மை, அன்பு, தமக்கெனப் பொருள் சேமியாமை, உடலுழைப்பு ஆகியவற்றின் மீது தம் வாழ்க்கையை அவர் அமைத்துக் கொள்ள வேண்டும். இத்துடன் அடக்கம், அயரா உழைப்பு, பொறுமை, அன்பு நிரம்பியவராகவும், தனியாகவும் மற்றவர்களுடன் கூடியும் பணி செய்பவராகவும் இருக்க வேண்டும். இவர் சாதி, கட்சி, அரசியல் ஆகியவற்றிற்கு அப்பால் விலகி நிற்க வேண்டும். ஆனால் இவற்றிற்கு அப்பாற்பட்டு ஒதுங்கி நிற்க இயலாதவர்களிடம் இவர் வெறுப்புக் கொள்ளக்கூடாது. தாம் மேலும் மேலும் தூய்மையாக வாழ்வதன் மூலமே, இவர் தம்மைத் திறம்பட்டவராக நிரூபித்துக் காட்ட இயலும். ஒரு நல்லாசிரியர் எப்படி இருக்க வேண்டுமென்பதற்குக் காந்திஜி தம் சொந்த வாழ்க்கையில் தாமே சான்றாக விளங்கினார். தம்முடைய வாழ்வில் தாமே அனுசரிக்காத எதனையும் அவர் மற்றவர்கட்குப் புகட்டியதில்லை.

## *பெண் கல்வி :*

ஆண்களுக்கும் பெண்களுக்கும் பெரும்பாலும் ஒரே மாதிரியான கல்வியே இருக்க வேண்டும் என காந்திஜி விரும்பியதால், அவர் ஆண், கல்விக்கும், பெண் கல்விக்கும் வேறுபாடு காணவில்லை. ஆண் குழந்தைகளும், பெண் குழந்தைகளும் சேர்ந்து பயில்வதையே அவர் விரும்பினார். ஆனால் பதினொன்கு வயதுக்குப் பிறகு கூட்டுக்கல்வி தானிருக்க வேண்டும் என்பதை அவர் வற்புறுத்தியதில்லை.

***உயர் கல்வி :***

உயர்கல்வி பற்றிய காந்திஜியின் கருத்து திட்டவட்டமானது. வாய்ப்புக் கிட்டியபோதெல்லாம் அவர் அவற்றை வலியுறுத்திக் கூறி செயல்படுத்தி வந்தார். உயர் கல்வி பற்றிய அவருடைய கருத்துக்கள் வருமாறு :

1. ''உலகத்தில் பெறக்கூடிய எந்த அளவு உயர்ந்த கல்வியானாலும் சரி, அதற்கு நான் எதிரி அல்ல.''

2. ''குறிப்பாக அதனால் ஏதாவது பயன் விளையுமானால் அரசாங்கம் அதற்காகச் செலவழிக்கலாம்.''

3. ''உயர்கல்விக்காகப் பொதுப்பணத்திலிருந்து செலவழிப்பதை நான் எதிர்க்கிறேன்.''

4. "நம் கல்லூரிகளில் கலைப்பாடத்திற்காகச் செலவழிக்கும் மிகப் பெருந்தொகை முற்றிலும் வீணானது. படித்த மக்களிடையே வேலையில்லாத் திண்டாட்டத்தை வளர்த்து வருகிறது. துரதிர்ஷ்ட வசமாகக் கல்லூரிக்குச் சென்று அங்குத் திணறும் நம் இளைஞர்களும் பெண்களும் தங்கள் உடலுரம், அறிவுத் தெளிவு ஆகிய நலன்களெல்லாம் இழந்து நிற்பது மிகப்பெரிய கொடுமையாகும்.''

5. "இந்தியாவில் அன்னிய மொழி வாயிலாக உயர்கல்வி கற்பித்தது, அறிவுத் துறையிலும் தார்மிகத்துறையிலும் தேசத்திற்கு மிகப்பெரிய தீமையை விளைவித்து விட்டது. இழைக்கப்பட்ட அநீதி எத்தகையது என்பதை உணர இன்னும் சிலகாலம் பிடிக்கும். இத்தகைய கல்விக்குப் பலியான நாம் அதுபற்றித் தீர்ப்பு வழங்க முடியாது.'

உயர்கல்விக்குத் தாம் எதிரியல்ல என்று காந்திஜி திட்டமாகக் கூறுகிறார். ஆனால் இந்த நாட்டில் நடைபெற்று வந்த உயர் கல்விக்கு அவர் பரம விரோதி. அவருடைய கல்வித் திட்டத்தில், சிறந்த நூலகங்களும் ஆராய்ச்சிக் கூடங்களும், இடம் பெறும். இதன்படி ஏராளமான மருத்துவர்களும், எஞ்சினியர்களும், மற்றும் பல நிபுணர்களும் இருப்பார்கள். இவர்கள் மக்களின் தேவைகளையும் உரிமைகளையும் பூர்த்தி செய்யும் உண்மையான தேசத் தொண்டர்களாக இருப்பர். இந்நிபுணர்கள் அனைவரும் அன்னியமொழியிலன்றி மக்களின் மொழியிலேயே பேசுவர். அவர்கள் பெற்ற அறிவு மக்களின் பொதுச் சொத்தாக இருக்கும்.

## *முதியோர் கல்வி :*

காந்திஜியின் பேச்சும் எழுத்தும், பள்ளி - பல்கலைக்கழகக் கல்வியுடன் மட்டும் நிற்கவில்லை. தம்முடன் தொடர்பு கொண்ட மக்களுக்குத் தம் உரையாடல், தம் சொந்த வாழ்க்கை ஆகியவற்றின் வாயிலாக அவர் கல்வி புகட்டினார். இலட்சக்கணக்கான மக்களுடன் அவர் கடிதத் தொடர்பு கொண்டிருந்தார். அவர் தனிப்பட்டவர்களுக்கு எழுதிய ஆயிரக்கணக்கான கடிதங்கள் சேகரிக்கப்பட்டு மக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. பிறவியிலேயே அவர் ஒரு சிறந்த கல்வியாளர் என்பதற்கு இக்கடிதங்களே சான்று பகரும். பிறருக்குத் தம் கருத்துக்களைத் தெரிவிக்கக் கிடைத்த எந்தவாய்ப்பையும் அவர் நழுவ விட்டதில்லை. மனித வர்க்கத்திற்குக் கல்வி புகட்ட எந்தவிதமான சாதனத்தையும் பயன்படுத்தத் தவறவில்லை. தலைசிறந்த பத்திரிகை ஆசிரியராக அவர் விளங்கினார். மனித சமுதாயத்தின் கலாச்சார, ஆன்மிகத் தரத்தை மேன்மேலும் உயர்த்துவதற்காக வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைப் பற்றியும் அவர் ஒவ்வொரு வாரமும் எழுதி வந்தார்.

அவர் வேறு யாரையும் விட மிக அதிக அளவு நாட்டில் சுற்றுப்பயணம் செய்து மக்களுடன் நேரடியாகப் பேசினார். தம் கருத்துக்கள் செயல்படுவதற்காகப் பல நிறுவனங்களை உருவாக்கினார். மனமாற்றத்தில் அவருக்கு நம்பிக்கை இருந்தது. மனமாற்றத்திற்கான இணக்குதல், கல்வி ஆகியவற்றின் மூலம் சமுதாயத்தில் முழு மாறுதல் ஏற்படுத்த முடியும். உண்மை, அஹிம்சை ஆகியவற்றின் அடிப்படையில் சமுதாயம் முழுவதையுமே புதிதாக நிர்மாணிக்க முடியும். அன்பின் மூலமும் மூளைக்கும் இதயத்துக்கும் சரியான கல்வியளிப்பதன் மூலமும் பலாத்காரத்தை வெல்ல முடியும் என்பதையும் தம் வாழ்நாளிலேயே காந்தியடிகள் நிரூபித்துக் காட்டினார். ஆனால் இன்னும் நடைபெற வேண்டியது எவ்வளவோ உள்ளது. காந்தியடிகள் கண்டுபிடித்த புதிய கல்வி முறையைச் சரியாக உணர்ந்து பரவலாக அமல் நடத்தினால், துன்பத்தா தவிக்கும் இன்றைய உலகின் பல்வேறு தீமைகள் நீங்கிட வழி ஏற்படும். சோதனைகள் வாயிலாகவும் தம் சொந்த வாழ்க்கை அனுபவங்களின் மூலமும் கண்டுபிடித்து, நீண்ட நாள் நிலைத்து நிற்கக்கூடிய தம்முடைய கொடை என காந்திஜி உலகிற்கு வழங்கிய புரட்சிகரமான இந்தக் கருத்துக்களைப் பற்றி

ஆசிரியர்களும் கல்வி நிபுணர்களும் ஆழ்ந்த கவனம் செலுத்த வேண்டும்.

## *தொகுப்புரை :*

காந்தியடிகள் அளித்த புதுக்கல்வியின் நோக்கம் :

ஒவ்வொரு மனிதனிடமும் அமைந்துள்ள உடற் பண்புகள், உள்ளப் பண்புகள், ஆன்மப் பண்புகள் என்ற மூவகைப் பண்புகளையும் ஒருமித்து சீராக வளரச் செய்வதன் மூலம் புதிய மனிதனை உருவாக்குதல். இத்தகைய புதிய மனிதர்களின் மூலம் கூட்டுறவு முறையில்பரஸ்பரம் ஒத்துழைப்பது என்ற அடிப்படையில் சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட, ஏற்றத் தாழ்வில்லாத புதிய சமுதாயம் உருக்கொண்டு எழச் செய்தல்.

## *முறைகள் :*

1. ஏதாவது ஓர் ஆக்கத் தொழிலை மையமாகக் கொண்டு கற்றுத் தருதல்.
2. நடைமுறை வாழ்க்கையோடு இயைபுபடுத்திப் பாடங்களைக் கற்றுக் கொடுத்தல்.
3. தாய்மொழி மூலம் கல்வி.

## *இயல்புகள் :*

1. தன்னம்பிக்கையை வளர்த்து தன்னிறைவு பெற வாய்ப்பளிக்கிறது.
2. உள்ளார்ந்த திறமைகளை வளர்க்கிறது.
3. கூட்டுறவுச் சமுதாயப் பண்புகளைத் தோற்றுவிக்கிறது.
4. நாட்டில், உலகில் அமைதி நிலவ அகிம்சையில் பயிற்சி தருகின்றது.
5. மக்களாட்சிக்கான பயிற்சியளிக்கின்றது.
6. ஒழுக்கம் நிறைந்த வாழ்க்கையை உருவாக்குகின்றது.

வாழ்க்கைக்காக

வாழ்க்கை மூலம்

வாழ்க்கை முழுவதும்

கல்வியளிப்பது காந்தி வழிக்கல்வியே.

# 4. தாய்மைப் பொருளாதாரம்

*குமரப்பாதாசன்*

காந்தியடிகள் சமுதாயத்தில் இருக்கின்ற எல்லோரும் நன்றாக வாழவேண்டுமென்று விரும்பினார். ஒரு சிலர் வளத்தில் வாழவும், பலர் வறுமையில் வாடவும் வழி வகுக்கின்ற எந்த முறையையும் அவர் ஏற்றுக் கொள்ளவில்லை .

நமது தாய்த்திரு நாட்டின் அரசியல் விடுதலைக்காகப் போராடிய காலத்திலேயே பொருளாதார மேம்பாட்டிற்கான திட்டங்களை வகுத்து அவற்றைச் செயல்படுத்துவதிலும் கவனம் செலுத்தினார். எதிர்காலத்தில் இந்தியாவில் உலகிற்கு வழிகாட்டக் கூடிய ஓர் ஒப்பற்ற சமுதாயம் உருவாக வேண்டும் என்று காந்தியடிகள் கனவு கண்டார். அத்தகைய சமுதாயத்தில் பொருளாதார வாழ்க்கை எப்படி அமைய வேண்டுமென்பதை விளக்கியிருக்கின்றார். அண்ணலின் கருத்துக்களை அறிந்து கொள்ள இன்றைய நடைமுறையிலுள்ள பொருளாதார வாழ்க்கை முறையைத் தெரிந்து கொள்வது தேவையாகும்.

## *இன்றையப் பொருளாதார வாழ்க்கை :*

நாம் வாழ்கின்ற சமுதாயத்தில் பொருளாதார. நடைமுறை எப்படி இருக்கின்றதென்று எண்ணிப்பார்த்தால் சில அடிப்படை உண்மைகளும், இன்றைய அமைப்பிலுள்ள குறைகளும் விளங்கும். இன்றைய அமைப்பின் குறிப்பிடத்தக்க போக்குகளைத் தொகுத்துக் கூறலாம்.

1. ஒரு சிலர் பெருஞ் செல்வர்களாக உள்ளனர். அவர்களிடம் நிலமும், பிற சொத்துக்களும் மிகுதியாக இருக்கின்றன. பெரும்பாலான மக்களும் ஏழைகளாக வறுமையில் வாடுகின்றனர்.

2. வருவாயில் ஏற்றத்தாழ்வு பெருமளவில் இருக்கின்றது. அடிப்படைத் தேவைப் பொருட்களையே வாங்கமுடியாத அளவிற்கு மாதம் நாற்பது ரூபாய்க்குள் வருவாய் பெறுகின்றவர்கள்-நமது நாட்டில்-நூற்றுக்கு எழுபது பேர். சிலர் அதிக வருவாய் பெற்று ஆடம்பரமாக வாழ்கின்றனர்.

3. இயற்கை மனித இனத்திற்குப் போதுமான அளவில் வளங்களை அளித்திருக்கின்றது. மனிதர்கள் தன்னலத்தினால் அவற்றைச்

சரியாகப் பயன்படுத்தவில்லை . இலாப நோக்கத்தினால் இயற்கை வளத்தை அழித்து விட்டுத் துன்பப் படுகின்றனர். சான்றாக, மரங்களை மிகுதியாக வெட்டியதால் இன்று மழையின்றித் தொல்லைப்படுவதைக் கூறலாம்.

4. ஒரு சில நகரங்களில் பெருந்தொழில்களை வளர்த்துள்ளனர். நகரங்களின் வளர்ச்சியினால் கிராமங்கள் சீர்குலைகின்றன.

5. உற்பத்தித்துறைகளில் இயந்திரங்களைப் பெருமளவில் பயன்படுத்துகின்றனர். இதனால் வேலையில்லாத் திண்டாட்டம் வளர்கின்றது.

6. கலப்படம் செய்தல், இலஞ்சம் வாங்குதல் போன்ற பொருளாதாரக் குற்றங்கள் பெருகுகின்றன. அறமற்ற வழியிலும் பொருள் தேடுகின்ற மோகம் வளர்கின்றது.

7. படித்து உயர்ந்த அலுவல்களில் இருப்பவர்களும், செல்வம் படைத்தவர்களும் உடல் உழைப்பின்றியே அதிக வருவாய் பெறுகின்றனர். உடல் உழைப்பில் ஈடுபட்டவர்களுக்குக் குறைந்த வருமானமே கிடைக்கின்றது. ஆகையால் பெரும்பாலானவர் களுக்கு உடல் உழைப்பில் வெறுப்பும் உழைக்காமல் வருவாய் பெறுவதில் விருப்பும் இருப்பதனைக் காணலாம்.

8. ஆடம்பர வாழ்க்கையில் மோகம் வளர்கின்றது. மக்கள் போட்டி போட்டுக் கொண்டு விருப்பங்களைப் பெருக்குகின்றனர். இதனால் ஒரு வகைப்போலி நாகரிகம் வளர்கின்றது.

9. பொருளாதாரப் போட்டியும் பொறாமையும் மக்களைப் போரிடும் இனங்களாகப் பிரிக்கின்றன. இவற்றின் விளைவாக வன்முறை தலைதூக்குகின்றது. பெரும்பாலான உள்நாட்டுக் கலகங்களுக்கும், போராட்டங்களுக்கும், உலகப்போர்களுக்கும் பொருளாதார அமைப்பு முறையே காரணமாக உள்ளது.

## *அகிம்சையும் சத்தியமும் :*

காந்தியடிகள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் போன்றே பொருளாதாரத்திலும் அகிம்சையும் சத்தியமும் இருக்கவேண்டுமென்று கூறுகின்றார். இன்றையப் பொருளாதார வாழ்க்கை அமைப்பிலிருக்கின்ற இம்சையையும் (வன்முறையையும்) அசத்தியத்தையும் (பொய்மையையும்) விலக்க வேண்டும். புதிய பொருளாதார அமைப்பு குறைகளற்றதாக, எல்லா மக்களுக்கும் வாழ்வளிப்பதாக இருக்க வேண்டும்.

*வாழ்வியல் தரம் :*

காந்தியத்தின் அடிப்படையில் பொருளாதார வாழ்க்கை உயர்ந்த தன்மையில் அமைய வேண்டும். ஒவ்வொருவரும் எப்படித் தங்களது வாழ்க்கைக்கு வேண்டியவற்றைப் பெறுகின்றனரென்பதை ஆராய்ந்து பார்த்தால் அவர்களது வாழ்வியல் தரம் எப்படிப்பட்டதென்பதை அறியலாம்.

மேற்கத்தியப் பொருளியலறிஞர்கள், ஒருவர் மிகுதியாகப் பொருட்களைப் பயன்படுத்தினால் அவருடைய வாழ்க்கைத்தரம் (Standard of Living) உயர் வானதென்று கருதுகின்றனர். அவருடைய வருவாய் வரும் முறையைப் பற்றியோ, அவர் செலவிடும் வழிகளைப் பற்றியோ அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. ஆனால் காந்தியம் ஒருவரின் பொருளாதார வாழ்க்கையில் பின்பற்றுகின்ற அறநெறி முறைகளை ஒட்டியே அவருடைய வாழ்வியல் தரத்தை நிர்ணயிக்கின்றது. .

வாழ்வியல் தரத்தை நிர்ணயிக்க வழிகாட்டும் வகையில் காந்தியப் பொருளாதார அறிஞரான டாக்டர் ஜே.சி. குமரப்பா வாழ்க்கையை ஐந்து வகைகளாகப் பகுக்கின்றார்.

முதலாவதாக, வாழ்வியல் தரத்தின் கீழ்மட்டத்தில் இருப்பது ''கொலை வாழ்க்கை ''. இதற்குச் சான்றாக காட்டில் பிற உயிர்களைக் கொன்று வாழும் புலியைக் கூறலாம். மற்ற உயிர்களின் ஆக்கத்திற்கு எந்த வகையிலும் துணை செய்யாத புலி அவற்றை அழித்து வாழ்கின்றது. இது முழுமையான இம்சை வாழ்வாகும். புலியைப் போல வாழும் கொலைகார மனிதர்கள் இருக்கின்றார்கள். இவர்கள் மற்றவர்களின் உயிரைப் போக்கியும் வாழ்வார்கள். இவர்களால் சமுதாயத்தின் அமைதி கெடும். இப்படி வாழக் கூடாது.

இரண்டாவது, கீழ்நிலையிலிருந்து அடுத்த தரத்தில் இருப்பது ''கொள்ளை வாழ்க்கை ''. பழத் தோட்டங்களில் புகுந்து கொள்ளையிட்டு வாழும் குரங்கின் வாழ்க்கையை இதற்குச் சான்றாகக் கூறலாம். குரங்கு உழைத்து எதையும் உருவாக்குவதில்லை. மற்றவர்கள் உழைப்பின் பலனைத் திருடித் தின்கின்றது. இதைப்போல, மற்றவர்களைச் சுரண்டி வாழ்பவர்கள் உள்ளனர். இவர்களின் வாழ்க்கையில் வெளிப்படையாக வன்முறை தெரிவதில்லை. மறைமுகமாக வன்முறை இருக்கின்றது. இதுவும் கீழ்த்தரமான பொருளாதார வாழ்க்கையே.

மூன்றாவதாக, உயர்ந்த வாழ்வியல் தரமாகக் கருதத்தக்க ''முயற்சி வாழ்க்கை '' இருக்கின்றது. முயற்சி வாழ்விற்கு உழைப்பு அடிப்படையாகும். இப்படிப்பட்ட வாழ்க்கை முறையைத் தேனீயிடம் காணலாம். தேனீ ஒவ்வொரு மலராகத் தேடிச் சென்று துளி துளியாகத் தேனைச் சேர்க்கின்றது. தனக்குத் தேன் தரும் மலர் காயாக மாற மகரந்தச் சேர்க்கைக்குத் துணை செய்கின்றது. ஒன்றைப் பெற மற்றொன்றைத் தரும் நீதி இருக்கின்றது. மலரிலிருந்து கிடைக்கும் "மதுவை" உழைப்பால் தேனீ மருந்தாகும் தேனாக மாற்றுகின்றது. உழைத்து வாழ்கின்ற மக்கள் இந்த வாழ்வியல் தரத்தில் இருக்கின்றார்கள். மண்ணையும் பொன்னாக்கும் மாண்பு அவர்களுடைய உழைப்பில் உள்ளது.

நான்காவதாக, சிறந்த நிலையில் அமைவது ''குழு வாழ்க்கை'' யாகும். தனித்து வாழாமல், மற்றவர்களோடு இணைந்து, கூட்டு முயற்சியில் வாழ்வது குழு வாழ்க்கையாகும். தேனீக்களின் வாழ்க்கையில் கூட்டு வாழ்க்கையின் சிறப்பியல்புகள் வெளிப்படுவதைக் காணலாம். எல்லோரும் தங்களுடைய திறமைக்கேற்ப உழைத்து, தேவைக்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும். நமது கூட்டுக் குடும்பங்களில் (Joint Families) கூட்டு வாழ்க்கையின் இயல்புகள் ஒளி வீசுகின்றன. இவற்றைச் சமுதாய அளவில் வெளிக் கொண்டுவரும் அமைப்பே வரவேற்கத் தக்கதாகும்.

ஐந்தாவதாக, மிகவும் போற்றத்தக்க வகையில் அமைவது "'தாய்மை வாழ்க்கை "'யாகும். ஒரு தாய் எந்தப் பலனையும் எதிர் நோக்காமல் பிள்ளைகளின் நல்வாழ்விற்காகப் பாடுபடுவதைப் பார்க்கலாம். தொண்டும், தியாகமும் தாய்மையின் தலையாய பண்புகளாகும். வாழ்வியல் தரத்தில் மிக உயர்ந்ததாக, இலட்சிய நிலையில் அமைவது தொண்டு முறையாகும். காந்தியடிகள் போன்ற பெருந்தலைவர்கள் தாய்மை வாழ்க்கை நடத்தியவர்களாவர்.

காந்தியம் எல்லா மக்களும் முயற்சி வாழ்க்கையில் ஈடுபட்டு, கூட்டு வாழ்க்கை நடத்தி, தொண்டு செய்யும் (தாய்மைப்) பண்பைப் பெற்றுத் திகழத்தக்க பொருளாதார அமைப்பு முறையை உருவாக்குவதையே இலட்சியமாகக் கொண்டிருக்கின்றது.

## *எளிய வாழ்க்கை :*

காந்தியப் பொருளாதாரம் எல்லா மக்களும் விரும்பி எளியவாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமென்பதை

வலியுறுத்துகின்றது. எளிய வாழ்க்கையென்றால் ஏழ்மையில் வாழ்வதன்று. வறுமையில் யாரும் வாடக்கூடாது. அதேபோல ஆரவாரமுள்ள ஆடம்பரமும் நல்லதல்ல. தேவைகளை மேலும் மேலும் பெருக்கிச் செல்வதால் மனிதன் தன்னலமிக்கவனாகி விலங்குநிலைக்குத் தாழ்கின்றான். எளிய வாழ்க்கையில் ஆன்மீக மேம்பாட்டிற்கு வாய்ப்பு இருக்கின்றது. உயர்ந்த சிந்தனையோடு எளிமையாக வாழ்பவர்கள் பயனுள்ள முறையில் வாழ்வார்கள்.

## *பரவல் முறை உற்பத்தி :*

நாட்டின் உற்பத்தி முறை பரவலாக அமைய வேண்டும். உழவும் தொழில்களும் செழித்து வளர்ந்திருக்க வேண்டும். பெருந்தொழில் வளர்ச்சி சுரண்டலையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் வன்செயல்களையும் வளர்க்கின்றது வேளாண்மையும், வேளாண்மை சார்ந்த சிறு தொழில்களையும் நாடெங்கும் வளர்த்தால் நமக்கு வேண்டிய தரமான தேவைப் பொருட்கள் கிடைக்கும். எல்லா மக்களும் உழைத்து வாழ வாய்ப்பிருக்கும். மக்களின் நலனுக்குத் துணை செய்யும் பொருட்களை மட்டுமே உற்பத்தி செய்ய வேண்டும். மக்களின் அடிப்படைத் தேவையான உணவு, உடை, இருப்பிடம் ஆகியவையே எல்லா மக்களுக்கும் கிடைக்காத நிலையில் ஒரு சிலரின் வசதிக்கும் ஆடம்பரத்திற்கும் தேவைப்படும் குளிர்பதனச் சாதனங்கள் போன்றவற்றையே உற்பத்தி செய்யும் இன்றைய நிலை தவறானது. மக்களுக்கு வேண்டியவற்றைத் திட்டமிட்டு உற்பத்தி செய்ய வேண்டும். கதர் கிராமத் தொழில்கள் புதிய அமைப்பிற்கு ஏற்றவைகளாக இருக்கும்.

## *கிராமப் பொருளாதாரம் :*

நமது நாட்டில் நூற்றுக்கு எண்பது பேருக்கு மேல் கிராமங்களில் வாழ்கின்றார்கள். கிராமங்கள் வாழ்ந்தால் தான் இந்தியா வாழும். கிராம மக்களின் வாழ்க்கையில் மறுமலர்ச்சியை ஏற்படுத்துகின்ற வகையில் நாட்டின் பொருளாதாரத்தை அமைக்க வேண்டும்.

காந்தியடிகள் ஒவ்வொரு கிராமத்தையும் தன்னிறைவு பெற்ற சிறு சிறு சமுதாயமாக உருவாக்க வேண்டுமென்று விரும்பினார். கிராமத்து மக்கள் தங்களுடைய தேவைப்பொருள்களைத் தாங்களே திட்டமிட்டு உருவாக்கிக் கொள்ள வேண்டும். மக்களிடம் சுதேசி மனப்பான்மை வளர்ந்தால் அவர்கள் தங்களுடைய கிராமத்தில் உற்பத்தியானவற்றையே வாங்கிப்

பயன்படுத்துவார்கள். நகரங்கள் கிராமங்களைச் சுரண்டி வாழும் நிலை இருக்காது.

## *கூட்டுறவு முறை :*

இன்றைய சமுதாயத்தில் உற்பத்தியான பொருட்கள் நுகர்வோர்களின் கைகளுக்குச் செல்வதற்கு முன்னால் பல இடைத்தரகர்களின் கைகளுக்குச் செல்கின்றன. இடைப்பட்ட ஒவ்வொரு வணிகரும் விலையோடு இலாபத் தையும் சேர்த்து விடுவதால் பொருட்களைப் பயன்படுத்துகின்றவர்கள் அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கின்றது. இத்தகைய சுற்றுவழி முறையால் கலப்படம், பதுக்கல், கள்ளக்கடத்தல் போன்ற தீமைகள் தோன்றுகின்றன. பொருளாதார நடவடிக்கைகளைக் கூட்டுறவுச் சங்கத்தின் மூலமாகக் கவனிக்கின்ற பொழுது பொதுநலம் கட்டிக்காக்கப்படும். எல்லோருக்கும் தேவைப்பொருட்கள் கிடைக்கின்ற வகையில் கூட்டுறவு அமைப்பின் மூலம் பகிர்வை நெறிப்படுத்தலாம்.

## *பொருளாதாரச் சமத்துவம் :*

பொருளாதார ஏற்றத் தாழ்வை காந்தியம் ஏற்றுக் கொள்ளவில்லை. தாய்மைப் பொருளாதாரத்தை அமைக்க முயன்று பொருளாதார சமத்துவத்தை ஏற்படுத்த வேண்டும். அன்பு வழியில் என்னென்ன செய்ய வேண்டுமென்பதைக் காந்தியடிகள் தெளிவாகக் கூறியிருக்கின்றார்.

சமுதாயத்திலுள்ள பெரிய செல்வர்கள் இப்பொழுது பின்பற்றுகின்ற சுரண்டல் போக்கை விட்டுவிட வேண்டும். அவர்கள் உண்மையான தர்மகர்த்தாக்களாக மாறவேண்டும். அவர்களிடம் குவிந்திருக்கின்ற செல்வம் அவர்களுடைய முயற்சியாலும், உழைப்பாலும் மட்டும் கிடைத்ததல்ல. சமுதாயத்திலுள்ள மற்றவர்களின் துணையோடும், பாதுகாப்போடும் தான் அவர்கள் செல்வத்தைச் சேர்த்திருக்கின்றனர். இந்த உண்மையை உணர்ந்தால் அவர்களின் மனம் மாறும் அவர்கள் தங்களது செல்வத்தைப் பொதுநல நோக்கத்தோடு பயன்படுத்துவார்கள்.

காந்தியம் தனியுடைமைக்குப் பதிலாக சமுதாய உடைமையை உருவாக்கும். இன்று கோவில்கள் எப்படி சமுதாய உடைமையாக இருக்கின்றனவோ, அதுபோலவே தொழில்களும் சமுதாயத்திற்குச் சொந்தமானவைகளாக இருக்கும். முதலாளி - தொழிலாளி என்ற பிரிவும் பேதமும் இருக்காது. உற்பத்திச்

சாதனங்கள் உழைக்கின்றவர்களின் கூட்டுப் பொறுப்பில் இருக்கும். எல்லோரும் சரிநிகர் சமானமாக வாழ்வார்கள்.

பொருளாதார சமத்துவம் ஏற்பட எல்லோரும் உழைத்து வாழ வேண்டும். மூளை உழைப்பிற்கு அதிக ஊதியமும் உடல் உழைப்பிற்குக் குறைந்த ஊதியமும் கிடைக்கின்ற நிலையை மாற்ற வேண்டும். எல்லோருக்கும் அடிப்படைத் தேவைகளைப் பெறும் வகையில் கூலி கிடைக்கும். வருவாயில் பெரிய வேறுபாடு இல்லாவிட்டால் பொருளாதார சமத்துவம் ஏற்படும்.

இன்றைய அமைப்பில் நாட்டின் வருவாயில் பெரும் பகுதியை சிலர் வட்டி, வாரம், இலாபம் என்ற பெயரில் எடுத்துக் கொள்கின்றனர். புதிய அமைப்பில் கடன் கொடுத்து மிகுதியாக வட்டி பெறுவதோ நிலத்தை அதிகக் குத்தகைக்குக் கொடுத்து விளைச்சலில் பெரும் பகுதியை வாரமாக வாங்குவதோ, பொருட்களை வாங்கி கூடிய விலைக்கு விற்று இலாபம் அடைவதோ நடைபெறாது. புதிய அமைப்பில் தனிப்பட்டோர் கடன்படும் நிலை இருக்காது. பொதுத் தேவைகளைக் கூட்டுறவுச் சங்கம் கவனித்துக் கொள்ளும். உழுபவர்களுக்கு நிலம் சொந்தமாக இருக்கும். ஆனால் நிலத்தை விற்கும் உரிமை இருக்காது. தனிப்பட்டவர்கள் இலாபத்திற்குப் பொருட்களை வாங்கி விற்க முடியாது.'

தன்னலத்திற்குப் பதிலாக பொதுநல நோக்கு வளர்கின்ற பொழுது தான் பொருளாதார சமத்துவம் நடைமுறைக்கு வரும். அறநெறிகளின்படி பொருளாதாரத் தொடர்புகளை முறைப்படுத்தி அமைத்துக் கொண்டால் எல்லோரும் இன்பமாக வாழலாம்.

## *<u>தாய்மைப் பண்புகள் :</u>*

சிறந்த பொருளாதார அமைப்பில் தாய்மைப் பண்புகள் மேலோங்கி நிற்கும். போட்டிக்குப் பதிலாகத் தொண்டு மனப்பான்மை வளர்வதால் அன்பின் வழியில் அனைவரும் ஒன்றுபட்டு வாழ்வார்கள்.

உடலின் உறுப்புக்கள் எல்லாம் தங்களது கடமைகளைச் சரிவரச் செய்தால் தான் உடல் நன்றாக இருக்க முடியும். அதேபோல சமுதாயத்தில் உள்ளவர்கள் அனைவரும் தங்களது பொருளாதாரப் பணிகளைப் பொறுப்புணர்ச்சியோடு செய்தால் நாட்டுப் பொருளாதாரம் மேம்பட்டு விளங்கும்.

# 5. அறநெறிச் சமயம்

*தி. சேஷாத்திரி*

சமயம் இந்த உலகை (நம்மையும் சேர்த்து) ஆளும் ஆண்டவன் ஒருவன் உள்ளான் என்று நம்பி, அவருக்கும் நமக்கும் உள்ள உறவைப் புரிந்து கொண்டு, அவர் விருப்பப்படி உலகில் நல்லவராக வாழ்ந்து, அவரை வழிபட்டு அவர் அருள் பெற்று இறுதியில் அவரை அடையச் செய்யப்படும் முயற்சி. அதைப்பற்றி நம் முன்னோர்களும் பெரியோர்களும் தெளியப்பேசியும், சொல்லியும், எழுதியும் வைத்திருக்கிறார்கள்.

சமயத்தில் இரண்டு வகைகள் உண்டு. ஆண்டவனைப் பெயர்கள், உருவங்கள் கொண்டவராக ஏற்று அவரை வாழ்த்தி வழிபடும் முறை ஒருவகை. இதை பக்தி என்று சொல்லலாம். அவரை உருவமற்ற ஒரு ஆற்றலாக, தத்துவமாக ஏற்று, பரமாத்மா என்று கூறி அவரைக்காண நாம் நம்முள்ளேயே உடல், மனம், புத்தி ஆகியவற்றைக் கடந்து உயிருக்குயிராய் இருக்கும் ஆத்மதத்துவத்தை உணர்ந்து கொள்ள வேண்டும் என்ற வகையில் சாதனை புரிவது மற்றொரு வகை. அதை ஆன்மீகம் என்று கூறுகிறோம். இதை ஞானமுறை என்றும் சொல்லலாம்.

நன்றாகப் புரிந்து கொண்டு பின்பற்றுவோமானால் பக்திக்கும் ஆன்மீகத்துக்கும் பயன் ஒன்றே என்று விளங்கும். உணர்ச்சி அதிகம் கொண்டவர்களுக்கு முதல் வகை எளிது. அறிவாற்றல் அதிகம் கொண்டவர்களுக்கு ஆன்மீகம் நிறைவளிக்கும் ஒன்று. இருவரும் அடைய முயல்வது பரம்பொருளைத் தான்.

சமயத்துக்கு மூன்று பகுதிகள் உண்டு. (1) கடவுள் - ஆண்டவன் அல்லது ஆத்ம-பரமாத்ம தத்துவம் பற்றிய அறிவு. (2) அவரை அடைய மனிதன் செய்ய வேண்டிய சடங்குகள் (3) இவை இரண்டையும் ஒட்டி அவன் பெற்றுப் பழக வேண்டிய சில பண்புகள்.

இவற்றில் ஒவ்வொரு பகுதியையும் பற்றிப் பல கருத்துக்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை குழப்பத்துக்குள்ளாக்கு கின்றன. அவற்றைத் தனித்தனியே பின்பற்றுகின்றவர்கள் அறியாமையாலும் பிடிவாதத்தாலும் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்கின்றனர். சமயத்தின் பெயரால் போர்களும் நிகழ்ந்திருக்கின்றன. இவற்றை எல்லாம் கண்ட சிலர் சமயமே வேண்டாம் என்றும் சொல்லத்

தொடங்குகின்றனர். இது சாப்பாட்டினால் தான் வியாதி வருகிறது. சாப்பாடே வேண்டாம் என்பது போல் ஆகிவிடும். காந்தியடிகள் சொல்லியிருப்பது போல் சமயம் இல்லாமலும் மனிதன் இருக்க முடியாது.

எனவே சமயத்தின் உண்மையை நன்கு புரிந்து கொண்டு சரியான முறையில் அதனைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

சமயம்-ஆன்மீகம், சமயம்-உலக வாழ்வு ஆகிய இரட்டை அம்சங்களின் உண்மை புலப்பட, பேச்சு, வாழ்க்கை இரண்டையும் ஒரு சேர வாழ்ந்த பெரியவர் வழியைப் பின்பற்றினால் அது எளிதாகும்.

அப்படிப்பட்ட பெரியவர்களுள் ஒருவர் மகாத்மாகாந்தி. அவர் சமயத்தில் உண்மையான, அடிப்படையான, மூட நம்பிக்கைகள் நீங்கிய, எல்லா சமயங்களுள்ளும் வேறுபாடு இன்றி நிற்கும் அம்சத்தை நன்கு அறிந்திருந்தார். அது மட்டுமல்ல. அதன்படி வாழவும் வாழ்ந்தார். எனவே அவர் கருத்துக்களைத் தெரிந்து கொள்வது நல்லது. உண்மையான சீரிய உலக வாழ்வையும், இந்த மனித வாழ்வின் பயனாகக் கிடைக்கும் நிலையையும் அடைய அது இன்றியமையாததுமாகும்.

காந்தியடிகள் கண்ட சமயத்தை சமய உணர்வு, சமய அறிவு, சமய வாழ்வு என்ற மூன்று பகுதிகளாகக் காணலாம்.

### *சமய உணர்வு :*

அடிகளுக்கு இயற்கையிலேயே கடவுள் நம்பிக்கை இருந்திருக்கிறது. ஒரு வகையில் பார்த்தால் அது எல்லோருக்கும் இருக்கவே இருக்கிறது. சிலர் வாழ்வில் சுற்றுச் சூழ்நிலை, அவர்கள் குடும்பநிலை முதலியவை அந்த உணர்வு மலர உதவும். பிறகு அறிவு வளர வளர படித்தும் கேட்டும் உணர்வு நிலைப்படும். வாழ்க்கையில் அது தன் முழு உருப்பெற்றுப் பயன் தரும்.

### *காந்தியடிகள் குடும்ப நிலை :*

அவர் அன்னை , பக்தி நிறைந்தவர். அவர் மிகவும் ஆழ்ந்த சமயப் பற்றுடையவர். பூஜை முடிக்காமல் அவர் சாப்பிடமாட்டார். விஷ்ணு கோவிலுக்குப் போவது அன்றாடக் கடமை. சாதுர் மாஸவிரதத்தைக் காக்காது அவர் ஒரு ஆண்டைக் கூடக் கழித்ததில்லை. நோய் வந்தால் கூட அவர் விரதத்தை நிறுத்தியதில்லை. ஒருமுறை சந்திராயண (சந்திரன் தேய்வு

வளர்ச்சிக்கேற்றவாறு உணவையும் படிப்படியாகக் குறைத்தும் கூட்டியும் கொள்கின்ற) விரதத்தின் போது நோய் வந்தது. அப்போதும் அவர் அதை நிறுத்தியதில்லை .

தந்தைக்கு சமயப்பயிற்சி அதிகம் உண்டு என்று சொல்ல முடியாது. என்றாலும் சமயப்பிரசங்கங்கள், புராணங்கள் கேட்கும் வழக்கம் உண்டு. வீட்டில் பாராயணம் செய்ததுண்டு. கடைசிக் காலத்தில் கீதையைப் படித்து வந்தார்.

ரம்பா என்ற செவிலித்தாய் படித்தவள் அல்ல. ஆனால் கலங்காத சமய உணர்வு கொண்டவள். அவள்தான் காந்தி அடிகளுக்கு முதன்முதலில் ''ராம நாம'' மந்திர தீட்சை செய்வித்தவள் என்று சொல்லலாம். ராமநாமம் சொன்னால் பிசாசு பூதங்களுக்குப் பயப்பட வேண்டாம் என்று சொல்லிக் கொடுத்தவள். அந்த மந்திரத்தை அடிகள் கடைசி வரை விடவேயில்லை.

காந்தி போர்பந்தரில் இருந்தபோது லதாமகராஜ் துளசிராமாயணம் வாசிப்பது வழக்கம். ராஜ்கோட்டில் ஏகாதசி தினங்களில் பாகவத பாராயணம் செய்வது வழக்கம். அப்போது அதில் அவர் மனம் அவ்வளவு லயிக்கவில்லை . பிற்காலத்தில் பண்டித மதன் மோகன் மாளவியா பாராயணம் செய்தபோது அதில் மிகவும் ஈடுபட்டார்.

அவரின் சமய உணர்வை விரிவாக்கிய நூல்கள் பல உண்டு. நம்பிக்கை நல்கிய நிகழ்ச்சிகள் பல உண்டு. அதற்கு அறிவு நீர் ஊற்றி வளர்த்த பெரியார்கள் பலர். அவர்களுள் சிலர் அட்டர்னிபேக்கர், கோட்ஸ், பிளிமத் சகோதரர்கள், பேச்சர்ஜிஸ்வாமி, ராய் சந்திரர் ஆகியோர்.

அவர் தந்தையும் தாயும் விஷ்ணு கோவிலுக்குச் செல்வது போலவே சிவன் கோவிலுக்கும் செல்வார்கள். அவர் வீட்டுக்கு முஸ்லீம்கள், பார்சிகள், ஜைனர்கள் எல்லோரும் வருவார்கள். எல்லோரும் அவர் தந்தையுடன் சமயம் பற்றியும் விவாதிக்கக் கேட்டிருக்கிறார். அப்போது அவருடைய சமய உணர்வு ஆழமும் அகலமும் கொண்டதாக ஆயிற்று. சிறுவயதில் கேட்ட கிறிஸ்துவப் பாதிரியார்களின் பிரசங்கங்கள் கிறிஸ்துவ மதத்தைப் பற்றி வெறுப்பை ஏற்படுத்தின. என்றாலும் பிறகு இங்கிலாந்திலும் ஆப்பிரிக்காவிலும் நல்ல கிறிஸ்துவ அன்பர்கள் கிடைத்த காரணத்தால் அவருக்கு கிறிஸ்துவ மதத்தின் பால் அன்பு ஏற்பட்டது.

இந்தவித அனுபவங்களால் அவருக்கு எல்லா மதங்களிடத்தும் அன்பும் மரியாதையும் ஏற்பட்டன. தன் மதத்தில் ஆழ்ந்த ஈடுபாடு ஏற்பட்டது. சமயத்தின் அறநெறிப் பகுதிகளில் உறுதி ஏற்பட்டது. அறநெறிக்கு சத்தியமே உயிர் என்று கண்டார். சத்தியத்தைத் தேடுவதே சமய வாழ்வின் குறிக்கோள். சத்தியம் எங்கும் கலந்திருக்கிறது என்ற உண்மையை அவர் உறுதியாகக் கொண்டார்.

அவர் பலநூல்கள் படித்தார். பஞ்சீகரணம், மணிரத்னமாலை, யோகவாசிஷ்டத்தின் முமுட்சுப் பிரகரணம், ஹரிபத்ர சூரியின் ஷட்தரிசன சமுச்சயம், பிரம்மஞானத்தின் திறவுகோல், ஆசிய ஜோதி, ராமாயணம், பாகவதம், பகவத்கீதை, தர்ம விசாரணை, மாக்ஸ்முல்லர் எழுதிய நூல்கள், விவேகாநந்தர் நூல்கள், பைபிள் அதன் பல வியாக்யானங்கள் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

நூல்களுள் பகவத்கீதை, ராமாயணம், பைபிளில் மலைப்பிரசங்கம் ஆகியவை அவர் சமய வாழ்வில் மிகவும் ஆழமாக வேரூன்றின. அதிலும் பகவத்கீதை கடைசிவரை அவருக்கு ஒளிகாட்டி வந்தது. அதையே அவர் தாய் என்று கூறி வந்தார். துணையாய் நின்று உதவி வந்தது.

இவற்றின் அடிப்படையில் அமைந்த காந்தியடிகளின் சமயம் பற்றிய கருத்துக்களை இனிக் காணலாம்.

***சமயம் :***

என்னைப் பொறுத்தவரை சமயம் என்பது பிரபஞ்சத்தின் அற ஆட்சியின் நியதியாகும். அது ஹிந்து மதம், கிறிஸ்தவம், இஸ்லாம் முதலியவைகளை உள்ளடக்கியும் அவற்றிற்கு அப்பாலும் ஆழ்ந்து நின்று அவற்றை இணைத்து அவற்றுக்கு ஒரு வலுவையும் தருவதாகும். (இதைத் தான் நாம் ஆத்மீகம் என்கிறோம்).

''அது மனிதன் குணத்தையே மாற்றிச் சிறக்கச் செய்கிறது. உள்ளேயிருக்கிற உண்மையுடன் பிரியமுடியாமல் இணைக்கிறது. எப்போதும் தூய்மையாக்கிக் கொண்டே யிருக்கிறது. அது மனிதனுள் இருக்கிற அழியாத அம்சம். அது மலர்ந்து, கடவுளை உணர்ந்து அவருக்கும் நமக்கும் உள்ள உறவை வலுப்படுத்திக் கொள்ளும் முயற்சியை எளிதாக்குகிறது.''

### *சமயத்தின் இன்றியமையாமை :*

''சமயம் இல்லாமல் யாரும் வாழ முடியாது. அதை மறுப்பது மூச்சு விடுகிறவன் மூக்கு இல்லை என்று சொல்வதை ஒக்கும்.''

''நாஸ்தீகவாதி கூட உண்மையைத் தேடக்கூடியவனாக இருந்து அறநெறியின் தேவையை உணர்ந்து தூய்மையான வாழ்க்கை யுடையவனாக அடக்கத்துடன் வாழ்ந்தால் அவன் வாழ்வும் அடிப்படைச் சமய வாழ்க்கையே.''

### *எல்லா சமயங்களும் ஒன்றே :*

''ஒரே சமயமே உலகிலிருக்கும் என்ற நம்பிக்கையை ஏற்றுக் கொள்ள முடியாது. கடவுள் ஒருவரே. எனவே சமயமும் ஒன்றுதான் இருக்க வேண்டும் என்பது பேச்சுக்குச் சரி. ஆனால் கடவுளைப் பற்றி ஒரே மாதிரியான அறிவும் உணர்வும் இருக்கும் இருவரை நாம் பார்த்ததில்லை. எனவே மக்கள் மனவளர்ச்சி, தேசகால நிலைக்கேற்றவாறு பல சமயங்கள் இருந்தே தீரும்.''

எல்லா மதங்களும் ஒரே கடவுளைத்தான் தலைமையாகக் கொண்டிருக்கின்றன.

எனவே உயர்ந்தது தாழ்ந்தது என்ற பேச்சில்லாமல் உண்மையாகத் தங்கள் மதத்தைப் பின்பற்றுகிறவர்கள் எல்லோருமே உயர்ந்தவர்கள் தாம். அவரவரை அவரவர் முறையில் உண்மையிலேயே அணுகிப் புரிந்து கொள்ள வேண்டும்.

மற்ற சமய நூல்களையும் படிப்பது நல்லது. பண்புள்ள மனிதன் உலகத்தின் மற்ற சமய நூல்களையும் படித்துத் தெளிந்து கொள்வது நல்லது. மற்ற சமயத்தினரை மதிக்கத் தெரிந்து கொண்டால் நம் சமயத்தில் நாம் கொண்டிருக்கும் மதிப்பும் அதிகமாகும்.

மேல் உலகத்தில் கிறிஸ்தவர்கள், முஸ்லீம்கள், ஹிந்துக்கள் என்ற பாகுபாடுகள் இருக்கும் என்று நம்புதற்கில்லை . கடவுள் யாரையும் அவரவர் செய்த கருமங்களுக்கேற்றவாறு பார்ப்பார் என்றே நம்பலாம்.

நீரின் தன்மை எங்கிருந்தாலும் ஒன்றே. அதைக் குவளையால் மாற்ற முடியாது. அதேபோல் ஜீவன் ஒன்றுதான். அதை மதம், ஊர், ஜாதி என்ற எந்தப் பாத்திரமும் பாதிக்கக் கூடாது. அதே சமயத்தில் பாத்திரம் இல்லாமல் நீரை வைத்திருக்கவும் பயன்படுத்தவும் முடியாது.

மதமாற்றம் தேவையில்லை. அவரவர் மதத்திலிருந்தே நல்ல நிலை எய்த முடியும். சமூக அமைப்புக்களையும் மாறுங் காலங்களில் ஏற்பட்ட பழக்க வழக்கங்களையும் சமயம் என்று சொல்லி ஏற்றுக் கொண்டு தேவையற்ற உண்மையல்லாத நாசகரமான விளைவுகளை ஏற்படுத்தி விடக்கூடாது.''

## *கடவுள் :*

'' கடவுள் இருக்கிறார். அறிவு - நேர்மையாகச் செயல்படுமானால் அவர் இருப்பை ஊகிக்க முடியும். ஆனாலும் கடவுள் தத்துவம் நம்பிக்கைக்குரிய பொருளே.''

## *கடவுள் உருவமுள்ளவரா?*

''அவரை ஓர் உருவமுள்ளவராக ஏற்றுக் கொள்ள வேண்டியதில்லை. உலகில் காணும் உருவங்கள் எல்லாம் அவருடையனவே.''

அவரைப் பகுத்தறிவின் மூலமோ, புலன்களின் மூலமோ காண முயலாதீர்கள். நல்வழி வாழ்ந்து உண்மையில் நம்பிக்கை கொண்டு பின்பற்றுங்கள். கடவுள் கிடைப்பார். ஏன் என்றால் உண்மையே கடவுள்.

கடவுள் ஒரு தத்துவநியதி. சட்டம்; ரகசியப் பேராற்றல்; பெரும் ஒளி; அடிப்படை அறிவுத் தத்துவம்: உலக இயக்கம்; உயிர்களின் உயிர்: பிரபஞ்சத்தின் ஆணிவேர்; உண்மை . உருவங்களோ அந்தத் தத்துவத்தின் தோற்றங்களே. உருவங்களை மட்டும் காண்பவன் அதனைப் புரிந்து கொள்ள மாட்டான். அவனால் சண்டையிடாமல் இருக்க முடியாது. முரண்பாடுகள் அவனுடைய இயற்கையாக ஆகிவிடும். ஆனால் உருவத்துக்குப் பின்னால் உள்ள அந்த உண்மையைக் காண முயல்பவன் முதலில் கடவுளை நினைப்பது பலருக்குக் கடினம்.

## *கோவில்கள் :*

கிறிஸ்தவர்களுக்கு மாதாகோவில் எப்படியோ அப்படியே ஹிந்துக்களுக்கும் அவர்கள் கோவில்கள் - பயனிலும் சரி, தேவையிலும் சரி. கோவில்களுக்குப் போகும் ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் நன்மையடைகிறார்கள். ஹிந்துவுக்குக் கோவில் இல்லை என்று சொல்லிவிட்டால் அவனுக்கு வாழ்க்கையே பயனற்றுப் போகும்.

உலகில் கடவுளுக்கு ஒரு கட்டடம் கட்டித்தராத சமயமே கிடையாது. அதைக் கோவில், மாதாகோவில், மசூதி என்று பல பெயரிட்டு அழைக்கிறார்கள். பிற்காலத்தில் காந்தி அடிகளுக்கு கோவிலுக்குப் போவது தேவையற்றுப் போயிற்று. அதற்காக அவர் கோவில்களின் தேவையையும் பெருமையையும் இல்லை என்று சொன்னதில்லை.

## *விக்ரஹங்கள் :*

கோவில்களைப் போலவே விக்ரஹங்களும் சிலருக்குத் தேவை. விக்ரஹ ஆராதனை மனித சுபாவத்தில் ஒரு முக்கியமான அம்சம். விக்ரஹ ஆராதனைக்குப் பின்புலத்தில் உள்ள கருத்தை மதிக்க வேண்டும். மனித இனம் முன்னேற அது மிகவும் உதவுகிறது. பல உருவங்கள் இருப்பதாலேயே பல தெய்வங்கள் என்று ஆகிவிடாது.

## *கடவுளின் பெயர் :*

பெயரும் தேவை. காந்தியடிகள் ராமனின் திருப்பெயரை உயிராகக் கொண்டிருந்தார் என்பது நாம் அறிந்ததே.

## *கடவுள் வழிபாடு :*

கடவுள் வழிபாட்டில் பல அம்சங்கள் உண்டு. அது கடவுளை நாம் அறியும் முறைக்கு ஒத்து இருக்கும். வழிபாட்டின் சில முறைகளையோ ஒரே முறையையோ மக்கள் பின்பற்றலாம்.

கடவுளுக்குப் பக்தி செய்வது ஒருமுறை. அதற்குள் கோவிலுக்குப் போவது, விக்ரஹத்துக்குப் பூஜை செய்வது, புராணங்கள் கேட்பது, பிரார்த்தனை செய்வது அவர் பெயரை ஜபிப்பது, துதிப்பது என்று பல அம்சங்கள் உண்டு.

சிலர் கடவுளை அறிவுபூர்வமாகத் தேடுவர். அவர்கள் முறை "ஞானமுறை' எனப்படும்.

மற்றும் சிலர் கடவுளின் அருளாக இம்மை , மறுமையில் போகங்கள் பெற யாகம், யக்ஞம் முதலிய கருமாக்களைச் செய்கிறார்கள். அதுவும் ஒரு முறையே. கருமாக்களினால் போகம் கிடைக்கலாம். ஆனால் பிறவி வட்டத்திலிருந்து விடுதலை கிடைக்காது. அதன்பின் கடவுள் அன்பும் இருக்க வேண்டும். தவிர சுயநலப்பற்றற்று அடக்கம், பணிவு இவையும் வேண்டும். அதாவது போகத்தின் அடியில் தியாகமும் யோகமும் இருக்க வேண்டும்.

*பிரார்த்தனை, துதி :*

கடவுளைத் துதிப்பது மிகவும் முக்கியம். ஆனால் துதி அவன் புகழைப் பாடுவதாக இருக்க வேண்டும். பிரார்த்தனையில் நாம் பொருள்களை வேண்டுவதுமுண்டு. சரியான பிரார்த்தனை எது?

காந்தி அடிகளின் கருத்துப்படி பிரார்த்தனைகளுள் கடவுளிடம் என்னைத் தூய்மைப்படுத்து என்று கேட்டுக் கொள்வது தலை சிறந்தது. உனக்கும் உன் அடியார்களுக்கும் தொண்டு செய்ய ஆற்றல் கொடு, வாய்ப்புக் கொடு என்று வேண்டுவது அடுத்துச் சிறந்தது.

ஆனால் சுயநலம் காரணமாகப் பொருள்கொடு, வியாதியைத் தீர்த்துவை என்று வேண்டுவது கடைசித்தரம். பிறருக்கு இன்னல்தர கடவுளின் உதவியை நாடுவதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

*நோன்புகள் :*

சமயவாழ்வில் நோன்புகளுக்கு மிக உயர்ந்த இடம் உண்டு. நோன்புகளுள் சிறந்தது உண்ணா நோன்பு. அது ஆன்ம, சமய வாழ்வுக்கு மிகவும் இன்றியமையாதது.

*மௌனம் :*

மௌனம் உடற்சக்தியைக் காக்கிறது. உள்ளத்தின் பதட்டத்தைக் குறைக்கிறது. கடவுளை நெருங்க உதவுகிறது. காந்திஜி வாரத்துக்கு ஒருமுறை மௌன விரதம் அனுஷ்டித்தார்.

*விரதங்கள் :*

அவர் பதினொரு விரதங்களைக் கொள்ளும்படி கூறினார். இவை அரசியல், சமூக, ஆன்ம வாழ்வு எல்லாவற்றையும் அணைத்துச் செல்பவை.

*மொத்தத்தில் அவர் சமயம் போதித்ததென்ன?*

கடவுளை நம்பு. அடக்கம், பணிவுடன் அவர் படைப்புக்குத் தொண்டு செய். விரதங்கள் இருந்து, நாமம் சொல்லி, பிரார்த்தனை செய்து அவர் அருள் பெற முயலு. உண்மையே கடவுள். அதை நாடி முன்னேறு. அஹிம்சையே அதற்கு வழி. உலக வாழ்வில் ஈடுபட்டுக் கொண்டே பிறவி விடுதலைக்கு வழி செய்து

கொள்ளலாம். கடவுளை நம்பி, உண்மையைத் தேடி அன்பு வழியில் தொண்டு செய்து அடக்கம் பணிவுடன் அவருக்கு வழிபாடு நடத்தி வாழ்க்கையைப் பொருளுள்ளதாக ஆக்கிக் கொள்வோமாக !

''ஒழுக்கமே எல்லாவற்றிற்கும் அடிப்படை;

சத்தியமே ஒழுக்கமெல்லாவற்றின் சாரமும்.''

-காந்தியடிகள்

# 6. காந்தியடிகளின் பதினொரு விரதங்கள்

*க. ரா. கந்தசாமி*

சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட சமத்துவ சமுதாயத்தை உருவாக்குவதற்காகத் தம் வாழ்நாள் முழுவதும் இடையறாது பாடுபட்டு வந்த அண்ணல் காந்தியடிகள், இச்சமுதாயத்திற்குப் பொருத்தமான மனிதர்களை உருவாக்குவது முதற்கடமை என்பதை உணர்ந்திருந்தார். இதற்காக, மாந்தர் ஒவ்வொருவரும் தம் வாழ்வில் கட்டாயம் பின்பற்ற வேண்டிய ஒழுக்க நியதிகள் பதினொன்றை உருவாக்கி, அனைவரும் இவற்றைத் தவறாமல் பின்பற்றி வரவேண்டும் என்பதை வலியுறுத்தி வந்தார். அவர் அமைத்த ஆசிரமங்களில் சேர்ந்து வாழ்ந்தவர் அனைவரும், ஒவ்வொரு நாளும் காலையும், மாலையும் பிரார்த்தனையின் போது, "'சத்தியம், அகிம்சை , திருடாமை, நாவடக்கம், சமயசமரசம், நித்தியம் உடலுழைப்பு, அஞ்சாமை, நிலையாப் பொருள் சேமியாமை, எத்தாலும் கீழ்மேல் எண்ணாமை, புலனடக்கம், சுதேசி என்னும் இப்பதினொரு விரதங்களையும் எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றினாலும் தூய்மையாகப் பின்பற்றி வாழ்வோம்" என்று உறுதி மேற்கொண்டனர்.

1930-ஆம் ஆண்டு அண்ணல் எரவாடா மத்திய சிறையிலிருந்த போது, ஆசிரமவாசிகளுக்கு எழுதிய கடிதங்களில் ஒவ்வொரு வார மும் ஒரு விரதத்தைப் பற்றி எழுதி, விரதங்களின் இன்றியமையாமையை விளக்கி வந்தார். மேலும், வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம், ஆசிரமவாசிகளுக்கு மட்டுமல்லாமல், மக்கள் அனைவருக்குமே இவ்விரதங்களைப் பற்றி விளக்கிக் கூறியும் எழுதியும் வந்தார். இவ்விரதங்கள் பற்றி அவர் எழுதிய கட்டுரைகளை "'பதினொரு மகாவிரதங்கள்'' நூலில் காணலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக, அண்ணலின் வாழ்க்கையே இவற்றுக்கெல்லாம் சிறந்த விளக்கமாக அமைந்திருந்தது. இவ்விரதங்களைக் குறிப்பதற்காக அண்ணல் கையாண்டசொற்கள், நம் அன்றாட வாழ்வில் நம்மில் பலர் அடிக்கடி பயன்படுத்தி வருபவைதாம். ஆனால் இச்சொற்களுக்கு நாம் கொள்ளும் பொருளோடு அவர் அமைவதில்லை. பல சொற்களுக்கு நாம் கொள்ளும் பொருளுடன் மேலும் ஆழ்ந்த நுட்பமான பல பொருள்களை உள்ளடக்கி விளக்கம் கூறுகின்றார். இச்சொற்களுக்கு அவர் கூறும் விளக்கத்தை அறியும்போது நாம் வியப்படைவோம். ஆனால் மேற்போக்காகக் காணாமல் ஆழ்ந்து சிந்தித்து பார்த்தோமானால் அண்ணல் கூறும் உண்மை விளங்கும்.

அவர் குறிப்பிடும் பதினொரு விரதங்களுள் சத்தியம், அகிம்சை, திருடாமை, புலனடக்கம், நிலையாப் பொருள் சேமியாமை ஆகிய ஐந்தும் நம் நாட்டில் மிகப் பழங்காலந்தொட்டு வற்புறுத்தப்பட்டு வருபவை தாம். அவற்றுடன், இந்த யுகத்திற்கு இன்றியமையாதவை எனத் தாம் கருதிய நித்தியம் உடலுழைப்பு, நாவடக்கம், அஞ்சாமை, சர்வசமய சமரசம், கீழ்மேல் எண்ணாமை, சுதேசி என்னும் ஆறு விரதங்களையும் சேர்த்துப் பதினொரு விரதங்களாக்கினார். இனி, அவர் ஓவ்வொரு விரதத்திற்கும் கூறிய இலக்கணத்தையும் இவ்விரதங்களுக்கு எடுத்துக்காட்டாக அமைந்த அவர் தம் வாழ்க்கையையும் காண்போம்.

## *சத்தியம் :*

சத்தியம் என்றால் உண்மை பேசுதல், பொய் சொல்லாதிருத்தல் என்ற அளவுக்கே பலர் பொருள் கொள்கின்றனர். எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் உண்மையைக் கடைப்பிடிப்பதே சத்தியம் என்பதை விளங்கிக் கொண்டிருப்பவர் மிகச் சிலரே. இந்த விளக்கத்தை ஏற்றுக் கொள்கிற காந்தியடிகள், சத்தியத்திற்கு இதை விடவும் ஆழ்ந்த பொருள் கொள்கின்றார். ''சத்'' என்றால் இருப்பது. எனவே, சத்தியத்தைத் தவிர உண்மையில் வேறொன்றும் இல்லை என்றும் சத்தியமே கடவுள் என்றும் குறிப்பிடுகின்றார். இத்தகைய சத்தியமாகிய கடவுளை நேருக்கு நேர் காண வேண்டும் என்பதற்காகத் தம் வாழ்நாள் முழுவதும் செய்து வந்த எல்லாப் பணிகளையும் "'சத்திய சோதனை''யாகச் செய்து வந்தார். இதனால் தான், தம் வாழ்க்கை வரலாற்றுக்குச் ''சத்திய

சோதனை'' என்றே பெயரிட்டார். சின்னஞ் சிறுவயதில் அரிச்சந்திரன் நாடகம் பார்த்து

அரிச்சந்திரனைப் போல் உண்மைக்காகவே வாழ்வது என்று உறுதி எடுத்துக் கொண்ட காந்தியடிகள், எத்தனை இடர்கள் ஏற்பட்டபோதிலும் கொஞ்சமும் தளராமல் உண்மையுடனேயே வாழ்ந்தார். வக்கீல் தொழிலில் உண்மையுடன் நடக்கமுடியாது என்ற கூற்றுக்கு மாறாகச் சுமார் 20 ஆண்டு காலம் தென்னாப்பிரிக்காவில் வழக்கறிஞராகத் தொழில் நடத்திய போது, உண்மைக்கு மட்டுமே வாதாடுவதை நியதியாகக் கொண்டிருந்தார். தாம் ஏற்றுக் கொண்டிருந்த வழக்கில் தம் கட்சிக்காரரர் உண்மையைத் தம்மிடம் மறைத்திருந்து, பின்னர் தமக்கு அது தெரியவந்ததால் தாமாகவே உண்மையை நீதிமன்றத்தில் தெரிவித்திருக்கின்றார். இப்படியெல்லாம் செய்ததால், அவர் தொழில் கொஞ்சமும் பாதிக்கப்பட்டதில்லை. மாறாக உண்மைக்காக வாதாடுபவர் என்ற சிறப்போடு, தம் கீழ் பல வழக்கறிஞர்களை வைத்துக் கொண்டு தொழில் நடத்தும் அளவுக்குச் செல்வாக்குப் பெற்ற வழக்கறிஞராகத் திகழ்ந்தார். பொய்யும் பித்தலாட்டமும் நிறைந்தது தான் அரசியல் என்ற அவப்பெயரை நீக்கி, அரசியலிலும் மற்றும் வாழ்வின் எல்லாத் துறைகளிலுமே உண்மையுடன் வாழ முடியும் என்பதை வாழ்ந்து காட்டினார்.

''மனித வாழ்வுக்கு மூச்சுப் போன்றது சத்தியம்... சத்தியமே தலையாய தருமம். மற்ற எல்லா தருமங்களும் இதனுள் அடங்கும்... சத்தியம் என்பது "ஸ்பர்சவேதி'' (தொட்டதெல்லாம் பொன்னாக்கும் இயல்புடைய கல் போன்றது. காமதேனுவைப் போன்றும் அது இருக்கிறது. சத்திய சோதனை என்பது ஒரு பெரிய தவமாகும். சத்திய உபாசகன் துன்பங்களை ஏற்றுக் கொள்ள நேரிடும். ஒருவேளை உயிரையே துறக்கவும் நேரிடலாம். ஆயினும் வேறு வழியில்லை . துளி சுயநலத்திற்குக் கூட சத்திய வாழ்வில் இடமில்லை ....... சத்தியத்தைக் கடைப்பிடித்தல் தான் உண்மையான பக்தியாகும். அது தான் ''கடவுளிடம் சேர்ப்பிக்கும் வழி" என்பது காந்தியடிகளின் கருத்து.

***<u>அகிம்சை :</u>***

சத்தியம் என்பது இலட்சியம். அதனை அடைவதற்கேற்ற வழிமுறை அகிம்சை. சத்தியமின்றி அகிம்சையில்லை, அகிம்சையின்றி சத்தியமில்லை. ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்க முடியாது. இரண்டும் ஒரு நாணயத்தின் இரண்டு

பக்கங்களைப் போல'' என்று குறிப்பிடும் காந்தியடிகள், அகிம்சைக்குப் பின் வரும் விளக்கம் கூறுகின்றார்.

''உயிர்கொண்டு வாழும் எந்த உயிருக்கும் துன்பமிழைக்கக் கூடாது என்பது அகிம்சா தர்மத்தின் ஒரு அம்சம் தான். ஆனால் அது தான் அதன் குறைந்தபட்ச அம்சமாகும்..... பிறரைப் பற்றி மனதில் கெடுதலாக எண்ணுவதும் அதிக அவசரப்பட்டுக் காரியத்தைச் செய்வதும், பொய் பேசுதலும், மனத்தில் வெறுப்புக் கொள்ளுதலும், கெட்ட எண்ணங்களை மனத்தில் வளர்த்து வருவதும் அகிம்சா தர்மத்தை நாசமாக்குவதாகும்.''

''சத்தியம் என்னும் ஆலயத்தை அடைய அகிம்சை என்னும் பாதை வழியாகத் தான் நடந்து செல்ல வேண்டும். நாம் சாதனத்தைச் செவ்வையாக வைத்துக் கொண்டால் முடிவை அடைந்து விடுவது எளிதானது'' என்று வழிமுறைக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார் காந்தியடிகள். தம் அன்றாட வாழ்வில் எதிர்ப்பட்ட மிகச் சிறிய பிரச்னை முதல்பலம் பொருந்திய அந்நிய ஆட்சியின் கோரப்பிடியிலிருந்து தாய்த்திருநாட்டை விடுவிக்க முயன்ற மிகப்பெரும் பிரச்னை வரை எல்லாவிதமான பிரச்னைகளையும் அகிம்சை வழிமூலம் தான் தீர்க்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார்.

நாட்டு மக்களில் பலர், அகிம்சை வழி மூலம் நாடு சுதந்திரம் பெறுவது இயலாது. அப்படியே பெற முடிந்தாலும் நீண்ட காலமாகும். எனவே, வழிமுறையைப் பற்றிக் கவலைப்படாமல், சுதந்திரத்தை விரைவில் பெற பலாத்காரத்தையும் பயன்படுத்தத் தயங்கக் கூடாது என்று கூறியபோது காந்தியடிகள் மிகவும் அழுத்தந்திருத்தமாக, ''பலாத்கார வழிகளின் மூலம் நாட்டுக்குச் சுதந்திரம் பெற முயல்வதைவிட, அதற்காக நான் தனிப்பட்ட முறையில் அவசியமானால் யுகக்கணக்கில் காத்திருப்பேன்'' என்று பதில் கூறினார். நாட்டு மக்கள் அண்ணலின் தலைமையிலேயே அகிம்சை வழியில் அரசியல் சுதந்திரம் பெற்றனர்.

## *பிரம்மசர்யம் (புலனடக்கம்) :*

பிரம்மசர்யம் என்பதற்குப் புலன்களை அடக்கி தூய்மையான வாழ்க்கை வாழுதல் என்று பொருள் கொள்ளப்படுகின்றது. ஆனால் இது குறுகிய பொருள் தான் என்றும், பிரம்மம் அல்லது சத்தியத்தை அடையும் மார்க்கம் என்பதே இச்சொல்லின் அடிப்படையான பொருள் என்றும் காந்தியடிகள் விளக்கம் தருகின்றார். தூய்மையான வாழ்க்கை வாழ விரும்பும்

ஒவ்வொருவரும் தம்புலன்களை வென்று அவற்றின் மீது தாம் ஆட்சி செய்யும் நிலையில் இருக்க வேண்டும். புலன்களைத் தம் விருப்பம் போல ஓடவிட்டு விட்டால், அவை பல சமயங்களில், மனிதனை நெறிபிறழச் செய்து அவனைப் படுகுழியில் தள்ளிவிடுகின்றன. எனவே இவ்விஷயத்தில் அவன் எப்போதும் விழிப்பாக இருந்து வரவேண்டும்.

''உலகிலுள்ள ஜீவராசிகள் அனைத்தின் மீதும் அன்பு காட்டுவதே அகிம்சையாகும்''. திருமணம் செய்து கொண்டு தன் மனைவி, தன் கணவன், தம் குழந்தைகள், தம் குடும்பம் என்ற குறுகிய வட்டத்திற்குள் தம் அன்பை நிலை நாட்டிக் கொள்பவர்களால், மேலே கூறிய தூய அகிம்சையைப் பின்பற்ற இயலாமற் போகிறது. எனவே, அகிம்சைக்குக் கட்டுப்பட்டவன் திருமணம் செய்து கொள்ள முடியாது என்பது காந்தியடிகளின் கருத்து. ''அப்படியானால், ஏற்கெனவே திருமணம் செய்து கொண்டவர்களின் கதி என்ன?.......'' அவர்களுக்கும் ஒரு வழி இருக்கிறது. திருமணம் செய்து கொண்டிருந்தும், அவர்கள் திருமணமாகாதவர்கள் போல் நடந்து கொள்ள வேண்டும்....... அவர்கள் தம்மைச் சகோதரனும் சகோதரியும் போலப் பாவித்து வாழத் தொடங்கினால், உலகத்துக்குச் சேவை செய்யக்கூடிய வாய்ப்பு அவர்களுக்குக் கிட்டிவிடும் என்று கூறும் காந்தியடிகள், தாமே இதற்குச் சான்றாக விளங்குகின்றார். தென்னாப்பிரிக்காவில் பொது நல சேவையில் தீவிரமாக ஈடுபட்ட போதும், அங்கு நடைபெற்ற ஜுலுக் கலகத்தில் காயம்பட்டவர்களுக்குச் சேவை செய்யச் சென்றபோதும் தான் அவருக்கு இந்த உண்மை தெளிவாக விளங்கியது. முழுமையான பொதுநல சேவைக்குத் திருமணம், குடும்பம் ஆகியவை தடை என்பதை உணர்ந்த அவர் என்ன செய்வது என்று தீவிரமாகச் சிந்தித்த பின் தம் துணைவியார் கஸ்தூரிபாவுடன் கலந்து பேசினார். இருவரும் இனி வாழ்நாள் முழுவதும் பிரம்மசர்ய விரதத்தைப் பின்பற்றி நடப்பது என்ற அண்ணலின் யோசனைக்கு அன்னை கஸ்தூரிபா முழு சம்மதம் தெரிவித்தார். பின்னர் வாழ்நாள் முழுவதும் இருவரும் பூரண பிரம்மசர்யம் காத்து இன்னும் பெரிய அளவில் சேவை செய்யும் வாய்ப்பைப் பெற்றனர்.

***திருடாமை :***

மற்ற சொற்களுக்குப் போலவே, திருட்டு, திருடாமை ஆகிய சொற்களுக்கும் நாம் இதுவரை அறிந்திருக்கிற பொருளைவிட மேலும் பல பொருட்களைக் காந்தியடிகள் கூறுகின்றார். ஒருவர்,

தமக்குச் சொந்தமில்லாத பிறருடைய பொருளை அவருக்குத் தெரியாமல் கவர்ந்து கொண்டால் அது திருட்டு என்று பலரும் கருதுகிறோம். அது மட்டும் தான் திருட்டா? நம் வாழ்க்கையைக் கொஞ்சம் கவனமாகக் கூர்ந்து நோக்கினால், நம்மில் மிகப்பலர் திருடர்களாக இருக்கிறோம் என்பது விளங்கும் என்று காந்தியடிகள் கூறும்போது நாம் திகைக்கிறோம். ஆனால் கூர்ந்து நோக்கினால் அது உண்மை என்பது விளங்கும். அவர் கூறுவதைத் தொகுத்தும் காண்போம்.

1. "ஒருவருடைய பொருளை அவர் கண் முன்பாகவே கூட, அவருடைய உத்தரவின்றி எடுத்துக் கொண்டால் அதையும் திருட்டு என்றே சொல்ல வேண்டும்.''

2. சொந்தக்காரரர் யாரெனத் தெரியாமல், கீழே கிடக்கும் ஒரு பொருளை எடுத்து வைத்துக் கொண்டால் அதுவும் "'திருட்டே.''

3. ஒருவருடைய உத்தரவு பெற்றுக் கொண்டு ஒரு பொருளை வாங்கிக் கொண்ட போதிலும், உடனடியாக நம்மிடம் அப்பொருளுக்குப் பயன் இல்லாவிட்டால் அதையும் திருட்டு என்றே கூற வேண்டும். ஆகவே அனாவசியமாகப் பொருட்களைப் பிறரிடமிருந்துப் பெற்றுக் கொள்ளக் கூடாது. எனக்கு வேண்டாத பழத்தை நான் பெற்றுக் கொள்வதும், எனது தேவைக்கு மேல் அதிகமாகப் பெற்றுக் கொள்வதும் திருட்டுத்தான். திருடாமையின் தத்துவத்தைப் பின்பற்ற விரும்புபவன் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் தேவைகளைச் சுருக்கிக் கொள்வான். இந்தச் சட்டத்தினின்று தவறியவர் பலர் இருப்பதால் தான் உலகில் தாங்கொணாத வறுமை நிறைந்திருக்கிறது.

4. பிறருடைய பொருள்களைத் தன்னுடையதாக்கிக் கொள்ளலாம் என்று ஆசையோடு கண்களைச் செலுத்துவது "'மனத்தால் நடத்தும் திருட்டு '' ஆகும்.

5. உபவாசமிருக்கும் காலத்தில், உபவாசத்திற்குப் பின் என்னென்ன சாப்பிடலாமென யோசனை செய்து கொண்டிருந்தால் அதுவும் திருட்டுத்தனம் தான்.

6. திருடாமையை அனுஷ்டிப்பவன் ''நாளைக்கு என்ன செய்வது'' என்ற கவலையை ஒருபோதும் கொள்ளமாட்டான். அநேக திருட்டுகளுக்கு "நாளைக்கு" என்ற எண்ணமே ஆதி காரணமாயிருக்கிறது.

7. பிறருடைய எண்ணங்களைத் தன்னுடையதாகக் காட்டிக் கொள்வது "எண்ணத் திருட்டு" அல்லது "இலக்கியத் திருட்டு" ஆகும். பிறருடைய கண்டுபிடிப்புகளைத் தன்னுடையது போலக் காட்டுவதும் திருட்டுத்தான்.

ஆகவே, திருடாமை என்ற உன்னத தத்துவத்தைப் பின்பற்ற விரும்புபவன் அடக்கம் மிகுந்தவனாகவும், அறிவாளியாகவும், எச்சரிக்கை உடையவனாகவும், எளிமை வாழ்வை ஏற்றுக் கொண்டவனாகவும் இருத்தல் வேண்டும்.

## *நிலையாப் பொருள் சேமியாமை :*

இறைவன் தான் படைத்த ஜீவராசிகளுக்குத் தேவையானவற்றை ஒவ்வொரு நாளும் புதிது புதிதாகப் படைத்துக் கொண்டேயிருக்கின்றான். எனவே, நம்முடைய இப்போதைய தேவைக்கு மேல் நாளைக்கு என்று சேமித்து வைப்பது திருட்டுக்குச் சமம். இப்படிச் சேமித்து வைப்பதுதான் திருடர்களைத் தோற்றுவிக்கக் காரணம் ஆகிறது என்பது காந்தியடிகளின் கருத்து. தம்முடைய நாளையத் தேவைகளுக்கென்றும், பின் சந்ததியாருக்கென்றும், இப்படிச் சேர்த்து வைக்கத் தொடங்கியதனால் தான் உலகில் பணக்காரர்கள், ஏழைகள் என்ற பாகுபாடு ஏற்பட்டுள்ளது. எவ்வளவு பணம் சேர்த்தவர்களும் அத்தோடு திருப்தியடையாமல் மேலும் மேலும் செல்வம் குவித்துக் கொண்டேயிருக்கின்றனர். இப்படிச் செய்வதால், ஒரு பக்கம் பணக்காரர்களிடம் தேவைக்கு அதிகமான பொருள்கள் குவிந்து கிடக்க, மற்றொரு பக்கம் கோடிக்கணக்கான மக்கள் தம்முடைய தேவைகளைக் கூடப் பெற முடியாமல் துன்பப்பட்டு, பட்டினி கிடந்து சாகின்றனர். இந்த நிலை மாற வேண்டுமானால் பணக்காரர்களுக்குத் தான் பெரிய பொறுப்பிருக்கின்றது. அவர்கள் தமக்குத் தேவையானவை போக மீதியிருப்பவற்றை, அவை இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் ஏழை மக்கட்குப் பகிர்ந்து கொடுத்துவிட வேண்டும் என்று அண்ணல் யோசனை கூறுகின்றார். கடவுள் நம்பிக்கையுடையவர்கள் பிற்காலத்திற்கு எனச் சேமித்து வைக்கமாட்டார்கள் என்பது அவர் கருத்து.

அண்ணல் தென்னாப்பிரிக்காவில் வழக்கறிஞராகத் தொழில் செய்து கொண்டிருந்தபோது, ஆயுள் காப்பீட்டுக்கழக நண்பர் ஒருவரின் தூண்டுதலின் பேரில், தம் ஆயுளைக் காப்பீடு செய்து பணம் செலுத்தி வந்தார். சில தவணைகள் இப்படிச் செய்த பின் பிற்காலத்திற்கென இப்படிச் சேமித்து வைக்கத் தொடங்குவது,

கடவுளிடம் நம்பிக்கையற்ற செயலாகும் என்று கருதி, தொடர்ந்து பணம் கட்டுவதை நிறுத்திவிட்டார்.

நாகரிகம் என்பது தேவைகளை மேலும் மேலும் பெருக்கிக் கொண்டே போவது அல்ல. எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்குத் தம் தேவைகளைக் குறைத்துக் கொள்வது தான் நாகரிகம். ஆண்டவன் நமக்களித்துள்ள இந்த உடலே ஒரு ஆஸ்தி தான். இதைக்கொண்டு மற்ற உயிர்கட்குத் தொண்டு செய்து வருவதே ஆனந்த வாழ்வு என்று கருதுகின்றார் அண்ணல். ஜடப்பொருள்களைப் போலவே, ஆண்டவனின் நினைவிலிருந்து நம்மை அகற்றும் தேவையில்லாத எண்ணங்களையும் விட்டுவிட வேண்டும். அப்போது தான் அஞ்ஞானம் அகன்று ஞானம் கைகூடும் என்று புலப்படுத்துகிறார் நம்மை வாழ்விக்க வந்த மகாத்மா.

மேலே சொல்லப்பட்ட ஐந்து விரதங்களும் எத்தனையோ காலமாக இந்நாட்டில் வற்புறுத்தப்பட்டு வந்திருந்தாலும், காந்தியடிகள் புதிய நோக்கில் இவற்றிற்குக் கூறிய விளக்கங்களைப் பார்த்தோம். இனி, இந்த யுகத்தின் தேவையை ஒட்டி அவர் அளித்த மற்ற ஆறு விரதங்களையும் காண்போம்.

***உடலுழைப்பு :***

பன்னெடுங்காலம் மனிதர்கள் யாவரும் உடலுழைப்புச் செய்து வாழ்வதே வாழ்க்கை நியதியாக இருந்தது. ஆனால் பிற்காலத்தில் உடலுழைப்புச் செய்து வாழ்பவர், அறிவுழைப்பின் மூலம் வாழ்பவர் என்ற பிரிவு ஏற்பட்டு அண்மைக்காலத்தில் அவ்விரு பிரிவினரிடையேயும் பெருத்த ஏற்றத்தாழ்வு தோன்றிவிட்டது. உடலால் உழைப்பவர் நாளெல்லாம் எவ்வளவு கஷ்டப்பட்டு உழைத்தாலும், தம் வாழ்க்கையை நடத்துவதற்கே மிகவும் சிரமப்பட்டு வருகின்றனர். ஆனால் அறிவுழைப்பின் மூலம் வாழ்பவர், உடல் நலுங்காமல் உல்லாச வாழ்க்கை நடத்துகின்றனர். ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால், உடலுழைப்புச் செய்பவர்தான் உலகம் நிலைபெற்று வாழ இன்றியமையாத தொழிலைச் செய்கின்றனர் என்பது விளங்கும். இப்படியிருந்தும், அறிவுழைப்பே உயர்வாக மதிக்கப்பட்டு வருகிறது. அவர்களுக்கே அதிக வருவாய் கிடைக்கிறது. உடல் உழைப்பு தாழ்வாகவும், சில வகையான உடலுழைப்பு அருவருக்கத்தக்க தாகவும் கருதப்படுகின்றது. இது நியாய விரோதமானது. கொடுமையானது. இந்நிலையை மாற்றி உடலுழைப்பு செய்பவர்கள்தான் போற்றுதலுக்கும் மரியாதைக்கும்

உரியவர்கள் என்ற நிலையைச் சமூகத்தில் தோற்றுவிக்க விரும்பிய காந்தியடிகள், தாம் வற்புறுத்திய விரதங்களுள்

ஒன்றாக இதனையும் சேர்த்தார். அவர் கருத்துப்படி, இந்த உலகத்தில் வாழ விரும்புபவர் அனைவரும் கட்டாயம் உடலுழைப்புச் செய்தே வாழ வேண்டும். அறிவுழைப்பில் ஈடுபட்டுள்ளவர்களும் கூட, வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளைப் பெற சில மணி நேரமாவது விவசாயம், நூற்பு போன்ற ஏதாவதொரு பயனுடைய உற்பத்தித் தொழிலில் ஈடுபட வேண்டும். உடலுழைப்புச் செய்யாதவர்கட்கு வாழ்வதற்கு உரிமையில்லை என்ற நிலை ஏற்பட வேண்டும். உடல் வலுவுடைய யாருக்கும் இதில் விதி விலக்கே இருக்கக் கூடாது. தோட்டி வேலை செய்வதற்கெனத் தனியாக ஒரு வகுப்பினர் இருக்கக் கூடாது. ஒவ்வொருவரும் தமக்குத் தாமே தோட்டியாக இருக்க வேண்டும். யார் எந்த விதமான தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் அனைவருக்கும் சம ஊதியமே கிடைக்க வேண்டும். உடலுழைப்பின் மூலமே வாழ்வது என்ற இந்த உயரிய தர்மத்தை எல்லோரும் ஒப்புக் கொள்ளும்போது, சமுதாயத்தில் இன்று நாம் காணும் ஏழை-பணக்காரன், உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற பிரிவுகள் யாவும் நீங்கிச் சமதர்மச் சமுதாயம் ஏற்பட வழி பிறக்கும்.

## *அஞ்சாமை :*

அச்சம் கீழ்களது ஆசாரம். ஆண்டவனிடம் நம்பிக்கை கொண்டு அவனுக்குப் பயந்து நடப்பவன், இந்த உலகில் வேறு யாருக்கும் எதற்கும் அஞ்ச வேண்டுவதில்லை. பயத்தை உதறியெறிந்தவன்தான் சத்திய சோதனைக்கு ஏற்றவன். அஞ்சாமை உடையவன் தான் அகிம்சையைப் பின்பற்ற முடியும் என்பது அண்ணலின் துணிவு. எந்தக் காலத்திற்குமே இது தேவையான கருத்து. எனினும் தாம் வாழ்ந்த காலத்தில், அந்நியராட்சிக்கு ஆட்பட்டுக் கிடந்த இந்திய மக்கள் எதற்கெடுத்தாலும் அஞ்சி அஞ்சிச் செத்துக் கொண்டிருந்ததைக் கண்ட போது, இந்த மக்களுக்கு வேறு எதையும் - விட அஞ்சாமையை ஊட்டுவது தான் முழுமுதற் கடமை என்றுணர்ந்த காந்தியடிகள் அஞ்சாமையைத் தாம் வற்புறுத்திய விரதங்களுள் ஒன்றாகச் சேர்த்தார்.

அவர் இந்திய மக்களின் உள்ளத்தில் அஞ்சாமை விதையைத் தூவினார். ஆண்மை கொண்ட இந்தியா அச்சத்தைத் துடைத்தெறிந்து, அண்ணலின் அகிம்சை வழியில் வீறுநடை

போட்டது. அவர் எத்தனையோ வகைகளில் என்னைக் கவர்ந்தார். ஆனால் எதற்கெடுத்தாலும் அஞ்சி செத்துக் கொண்டிருந்த

இந்திய மக்களின் உள்ளத்தில் ஊறியிருந்த அச்சத்தைப் போக்கி, அச்சத்திலிருந்து அவர்களை விடுவித்தாரே-அதுதான் என்னை மிகவும் கவர்ந்தது. அச்சம் தவிர்த்த அண்ணல் அவர் என்று வியந்து போற்றுகின்றார், அண்ணலின் அகிம்சைப் படையில் சேர்ந்து தொண்டாற்றிய நேருஜி.

***நாவடக்கம் :***

பிரமச்சர்யம் (புலனடக்கம்) என்பதிலேயே நாவடக்கமும் அடங்கி விடும். அப்படியிருந்தும் விரதங்களுள் தனியாக இதற்கொரு இடம் ஏன் என்பதற்குக் காந்தியடிகள் விளக்கம் கூறுகின்றார். மற்ற புலன்கள் பாவம் செய்வதற்குப் பல சமயங்களில் நாக்குத்தான் காரணமாக இருக்கிறது. யார் தம்முடைய நாக்கு ருசிகளை அடக்கிக் கொள்கின்றார்களோ, அவர்களுக்கு மற்ற புலன்களை அடக்கி ஆள்வது எளிதில் கைகூடும். மருந்தைச் சாப்பிடுவது போலவே உணவையும் அருந்த வேண்டும். நாக்குக்கு நன்றாயிருக்கின்றதா என்று பாராமல், உடலுக்கு உகந்ததா? என்று மட்டும் கருதி அளவாகப் புசிக்க வேண்டும் என்று கூறுகின்றார்.

உணவு உண்பதற்கு உதவும் நாக்கு பேசுவதற்கும் கருவியாக இருக்கின்றது. பேசுவதிலும் நாவடக்கம் தேவை என்பதைக் காந்தியடிகள் பல்வேறு இடங்களில் மிகவும் வலியுறுத்துகின்றார். எதையும் நன்கு யோசித்து, யாரையும் புண்படுத்தாத முறையில் அளவோடு பேச வேண்டும். தகாதவற்றைப் பேசிவிட்டுப் பின்னால் வருந்தக் கூடாது என்று கூறுகின்ற காந்தியடிகள், 'நான் எப்போதும் இத்துறையில் எச்சரிக்கையுடன் இருந்து வந்துள்ளேன். நான் பேசியது அல்லது எழுதியது எதற்காகவும் பின்னால் நான் வருத்தப்படும் நிலை என்வாழ்வில் என்றும் ஏற்பட்டதேயில்லை' என்று குறிப்பிடுவது நம் அனைவருக்கும் சிறந்த எடுத்துக்காட்டு. அவ்வப்போது மௌன விரதம் இருப்பது நாவடக்கம் பேணச் சிறந்த வழி என்பது அண்ணலின் கருத்து.

***சமய சமரசம் :***

மனிதனுக்கும் அவனைப் படைத்த இறைவனுக்கும் உள்ள தொடர்பை நினைவுபடுத்தி நன்னெறியில் வாழ்ந்து இறைவனை

அடைய அவனை வழிப்படுத்துவதற்காகத் தோன்றியவையே சமயங்கள். காலத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப, பல்வேறு சமயங்கள் தோன்றின. ஆயினும் குறிக்கோள் ஒன்றே. இந்த உண்மையைப் புரிந்து கொள்ளாமல் 'தத்தம் சமயமே சிறந்தது;

மற்றவை தாழ்ந்தவை; தம் சமயத்தில் சேர்வதன் மூலமே கடைத்தேற முடியும்' என்று கூறி அறியாமை காரணமாக மக்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்கின்றனர். இதனால் எந்த விதமான நன்மையும் விளைந்ததில்லை. ஏற்பட்ட தொல்லைகட்கோ அளவில்லை. இந்த நிலையை மாற்றி அனைவரையும் ஒன்றுபடுத்தி வாழச் செய்ய சர்வசமய சமரச மனப்பான்மையை அண்ணல் வற்புறுத்தினார். எல்லாச் சமயத்தவர்களும் சேர்ந்து கூட்டுப் பிரார்த்தனை செய்யும் பழக்கத்தை அறிமுகப்படுத்தினார். அத்தகைய பிரார்த்தனை களில் எல்லாச் சமய நூல்களையும் படிக்கவும் ஏற்பாடு செய்தார்.

"ஒழுக்கமே சமயங்களின் சாரம், ஒழுக்கத்துடன் வாழ்வதே சமய வாழ்வு; உண்மையான ஒரு இந்து, உண்மையான ஒரு முஸ்லீம், உண்மையான ஒரு கிறிஸ்துவனுமாவான். இந்த விதி மற்ற எல்லாச் சமயத்தைச் சேர்ந்தவர்கட்கும் பொருந்தும்" என்று கூறி தாமே வாழ்ந்து காட்டினார். மக்கள் அனைவரும் அன்புடன் இணைந்து வாழ வழிபிறந்தது.

## *கீழ்மேல் எண்ணாமை (தீண்டாமை விலக்கு) :*

ஆதியில் ஏற்றத் தாழ்வில்லாமலும் பிற்காலத்தில் ஆயிரக்கணக்கான சாதிகளாகப் பிரிந்து தம்முள் உயர்வு தாழ்வு கற்பித்தும் வாழ்ந்து வந்த இந்து சமுதாயத்தில் மிகப் பெரிய அநியாயமாக முளைத்து தீண்டாமை, ("அக்கா'' என்பவர் கூறியபடி) ''நல்ல மரத்தை அரிக்கவந்த புல்லுருவி"' இது. இந்திய சமுதாயத்தின் மிகப் பெரிய கறையாகத் தோன்றிய "'தீண்டாமை'' என்னும் இத்தீமையை அடியோடு அழிப்பதற்குத் தம் உயிரையே பணயம் வைத்துப் பாடுபட்ட அண்ணல், தீண்டாமை விலக்கைத் தம் விரதங்களுள் ஒன்றாகச் சேர்த்ததில் ஆச்சரியமில்லை .

தீண்டத்தகாதவர் என்று சமூகம் ஒதுக்கி வைத்திருந்த சமூகத்தைச் சேர்ந்த சிலரைத் தம்முடைய சபர்மதி ஆசிரமத்தில் சேர்த்துக் கொண்டு அண்ணல் சமத்துவமாக வாழ்ந்ததால், கோபமடைந்த உயர்சாதி மனப்பான்மை கொண்ட மக்கள், ஆசிரமத்திற்குத் தாம் அளித்து வந்த உதவியை நிறுத்தி விட்டபோது அவர் கலங்கவில்லை. ஆண்டவன் படைப்பில் அனைவரும் சமம்.

தீண்டத்தகாதவர்கள் என நாம் ஒதுக்கி வைத்துள்ள மக்களும் ஆண்டவனின் குழந்தைகளே (ஹரிஜன்) என்று கூறி, ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக ஒரு பெரிய இயக்கத்தையே தொடங்கினார். அன்பு வழியில் மக்களிடையே நல்ல மனமாற்றம் ஏற்படச் செய்து மிகப் பெரிய சமுதாயப் புரட்சி விளைவித்தார்.

*சுதேசி :*

தம்மைச் சுற்றியுள்ளவர்களின் நலனைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமல் வாழ்ந்த மக்களுக்கு அவர்களின் கடமையை நினைவூட்டுவதற்காகவே சுதேசி தர்மத்தைத் தம்முடைய விரதங்களுள் ஒன்றாகச் சேர்த்தார் காந்தியடிகள். சுதேசி என்பதற்கு ''அண்டையார் நலன்நாடல்'' என்பது பொருள். ''சுதேசி தர்மத்தை அனுஷ்டிப்பவன் அருகில் உள்ளவர்களின் சேவைக்குத் தன்னை அர்ப்பணம் செய்து கொள்வான். அது தான் அவன் முதல் கடமை. அப்படியானால் தூரத்திலிருப்பவர்களின் நலனைப் புறக்கணிப்பதாகுமா? அவ்வாறு கொள்வதற்கில்லை.'' அருகாமையில் உள்ளவர்கட்கு உண்மையாகச் செய்யும் தொண்டு தூரத்திலிருப்பவர்கட்கு 'ஒரு போதும் தீங்கு செய்யாது. அவர்களுக்கு நன்மையே பயக்கும்' என்பது காந்தியடிகள் கருத்து.

காந்தியடிகளுக்கு முன்னர் சுதேசி இயக்கத்தைத் தோற்றுவித்த தலைவர்கள் இங்கிலாந்து நாட்டுப் பொருள்களை வாங்கக் கூடாது என்றே பொருள் கொண்டனர். இது எதிர்மறையானது. ஆனால் காந்தியடிகள் "சுதேசி தர்மத்தை" நமக்கு நினைவூட்டினார். இது உடன்பாட்டுமுறை. நமக்கு ஒரு பொருள் தேவையென்றால், நமக்கு மிகமிக அருகில் எங்கு அப்பொருள் உற்பத்தியாகிறதோ, கிடைக்கிறதோ அதைத் தான் வாங்கிப் பயன்படுத்த வேண்டும். இந்த நோக்கில் கவனித்தால், வெளிநாட்டில் உற்பத்தியாகி வரும் பொருள்களை மட்டுமல்ல, நம் நாட்டிலேயே தொலை தூரத்திலும், இயந்திரங்களின் மூலமும், உற்பத்தியாகும் பொருள்களையும் நாம் விலக்கிவிட்டு, கோடிக்கணக்கான மக்கள் பரவல் முறையில் ஆங்காங்கே கைத்தொழில் மூலம் உற்பத்தி செய்யும் பொருள்களையே வாங்கிப் பயன்படுத்த வேண்டுவது நமது கடமையாகும் என்பதை உணர்வோம்.

காந்தியடிகள் அளித்துச் சென்றுள்ள பதினொரு விரதங்களையும் முறையாகப் பின்பற்றி நிறைவாழ்வு வாழ்வோம்.

# 7. சர்வோதய சமுதாயம்

சாந்தா பாண்டியன்

## முன்னுரை :

அனைவருக்கும் நல்வாழ்வு நல்கும் நற்சமுதாயமே காந்தியடிகள் காண விரும்பிய இலட்சிய சமுதாயமாகும். அனைத்தையும் தழுவி நிற்கும் அன்பே அதன் அடிப்படையாகும். சமுதாய வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் அன்பும் அகிம்சையும் ஆட்சி செய்யும் சமுதாயமே சர்வோதய சமுதாயமாகும்.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மகாவீரரும் புத்தரும் அன்பு, அகிம்சை பற்றிப் போதித்தனர். மற்ற மகான்களும் தம் வாழ்வில் எளிமையையும் புலனடக்கத்தையும் கைக்கொண்டனர். தனி மனிதர்களிடம் இப்பண்புகளை வளர்க்கப்பாடுபட்டனர். கூட்டுக் குடும்ப முறையும் கிராம சமுதாய அமைப்பும் அதற்குத் துணை செய்தன. தனி மனிதன் தனது சொந்த ஆசைகளைத் தன் குடும்பத்துக்காகவும் கிராம சமுதாயத்திற்காகவும் துறக்கப் பழகிக் கொண்டான். பொருட்களைப் பகிர்ந்து கொள்ளவும், கூட்டுறவுடன் வாழவும், சமுதாயத்தின் பால் விசுவாசம் கொள்ளவும், அதன் ஒழுக்க நெறிகளுக்குக் கட்டுப்படவும் கற்றுக் கொண்டான். சகோதரத்துவமும் சமத்துவமும் அந்த உறவில் மகிழ்ந்தன. இந்த வரலாறும் ரஸ்கினின் (Unto This Last) (கடையனுக்கும் கடைத்தேற்றம்) என்ற நூலும் சர்வோதய சமுதாய அமைப்பைப் பற்றிய சிந்தனைக்குக் காந்தியடிகளை இட்டுச் சென்றன.

## "கடையனுக்கும் கடைத்தேற்றம்" :

ரஸ்கினின் ''கடையனுக்கும் கடைத்தேற்றம்'' மந்திர சக்திமிக்க ஒப்பற்ற நூல். அது காந்தியடிகளின் வாழ்க்கையையே மாற்றிய நூலாகும். ரயிலில் பொழுது போக்குக்காகப் படிக்கத் தொடங்கி இரவு முழுவதும் விடாது ஒரே மூச்சில் படித்து முடித்த பிறகே அவரால் அந்நூலைக் கீழே வைக்க முடிந்தது. அந்நூலில் வலியுறுத்தப்பெறும் அறிவுரைகளாவன.

1. தனி மனிதனுடைய நலன் சமுதாய நலனில் அடங்கியிருக்கிறது.

2. ஒரு வழக்கறிஞரின் வேலையும் ஒரு நாவிதரின் வேலையும் சம மதிப்புடையனவாகும். ஏனெனின் ஒவ்வொருவரும்

தத்தம் பணி மூலம் தமது வாழ்க்கைக்குத் தேவையானவற்றைப் பெற உரிமையுடையவராவர்.

3. உழைத்து வாழும் வாழ்க்கையே-குறிப்பாக உழவினையும் கைத்தொழில்களையும் மேற்கொள்ளுதலே-உயர்ந்த வாழ்க்கையாகும். இக்கருத்துக்கள் மனதுள் பதிய, காந்தியடிகள் இவற்றை இலக்கணமாகக் கொண்ட வாழ்க்கையை மேற்கொள்ளலானார். பிறரையும் மேற்கொள்ளத் தூண்டினார். ரஸ்கினின் நூலைத் தம் தாய் மொழியான குஜராத்தி மொழியில் சுருக்கமாக மொழி பெயர்த்தார். மொழி பெயர்த்து எழுதிய அந்த குஜராத்தி நூலுக்கு "சர்வோதயா" என்று பெயரிட்டார். சர்வோதயம் என்ற சொல் அனைவரின் மேம்பாடு என்று பொருள்படும்.

## *தனிமனிதனும் சமுதாயமும் :*

தனிமனிதனும் சமுதாயமும் மனித வாழ்வின் இரு முக்கிய அங்கங்கள். தனி மனித சுதந்திரம் மிக முக்கியமானதே என்றாலும், மனிதன் ஒரு சமூகப் பிராணியே என்பதை மறந்து விட முடியாது. சமுதாய முன்னேற்றத்திற் கேற்பத் தன்னை மாற்றியமைத்துக் கொள்வதன் மூலமே மனிதன் உயர்ந்து வருகிறான். கட்டுப்பாடில்லாத தனிமனித "உரிமை" காட்டு விலங்குகள் வாழ்க்கையில் காணப்படுவதாகும். சமூகமும் தனி மனிதனும் ஒருசேர முன்னேற வேண்டுமாயின் சமூகத்தின் அங்கமான தனிமனிதன் சமூக நலனுக்காகத் தன் நலனைச் சற்றேவிட்டுக் கொடுக்க வேண்டும். சர்வோதய சமுதாயத்தில் இது சாத்தியமாகும். அங்கே, "ஜாதிக் கொடுமையும் சமயப்பூசலும் பால் வேற்றுமையும் இன வேற்றுமையும் பண்டைக்காலப் பழங்கதைகளாகி ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்றே" அனைவரும் எண்ணியிருப்பர்.)

## *சரிநிகர் சமானமாக :*

மனிதர்களனைவரும் இறைவனின் அம்சமே. அனைவரும் சமம். மனிதரிடையே வேறுபாடு கற்பிப்பது தவறாகும். ஆண், பெண் என்ற பாலடிப்படையில் உயர்வு தாழ்வு காண முயல்வது பொருளற்றதாகும். மனித மேன்மையை இலட்சியமாகக் கொண்ட சமுதாயத்தில் ஆண், பெண், இருபாலார்க்குமான பண்புகள் இரு பாலாரிடத்தும் வளர வேண்டும். இருவரும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டும்.

இடைக்காலத்தில் மனிதன், பெண்களை வெறும் அடுப்பூதும் கருவிகளாகவே கருதலானான். பெண்களுக்கும் ஆண்களைப் போலவே சிந்தனையும் திறனும் ஆன்ம உணர்வும் உண்டு என்பதை மறந்து போனான். பெண்களும் தம்மைச் சக்தியிழந்தவர்கள் எனக் கருதத் தலைப் பட்டார்கள். அச்சம் அவர்களின் அணிகலனாகக் கருதப்படலாயிற்று. அனைத்தும் ஆடவர் பாதுகாவலிலேயே தாம் மேற் கொள்ள முடியும் என எண்ணினர். வயது வந்த பெண் வழித்துணைக்கு ஒரு ஆண் - அவன் ஐந்து வயதுப் பையனே ஆயினும்-வேண்டும் எனக் கருதும் நிலை உருவாயிற்று. 'இந்த அவல நிலை அகல வேண்டும்' என்றார் காந்திஜி. உண்மையான சுதந்திரம் பற்றிப் பேச வந்த அவர், 'அணிகலன் அணிந்த இளம்பெண் தனியளாக நள்ளிரவில் வெளியில் இடரின்றிச் சென்று மீளும் நிலையே அது' என்று கூறினார்.)

***சாதியொழிப்பு :***

சாதி, இன, மொழியின் பெயரால் வீண் சண்டைகள் எழுவதைப் பார்க்கிறோம். இவற்றின் அடிப்படையில் வேற்றுமை பாராட்டுவது வேண்டத்தகாததாகும். சாதியின் பெயரால் உயர்வு தாழ்வு கற்பித்து சிறுசிறு கூட்டமாகப் பலரையும் தனித்தனியே பிரித்துப் பார்க்கும் போக்கு நீங்க வேண்டும். ''சாதிகள் இல்லையடி பாப்பா'' என்பார் பாரதி. ஆம். செயற்கையாகச் சாதியின் பெயரால் பிரித்தல் தவறாகும். சாதி திருமணத்திற்குத் தடையாக இருக்கக் கூடாது. கலப்பு மணங்களும் கலந்துண்ணலும் அன்றாட நிகழ்ச்சியாக வேண்டும். சாதிக் கொடுமை நமது நாட்டில் தீண்டாமைக்கே கொண்டு சென்றது. பிராணிகளைக் கூடத் தடவிக் கொடுக்கத் தயாராயுள்ள மனிதன் மற்றொரு மனிதனைத் தீண்டத்தகாதவன் எனக் கருதலானான். தீண்டாமை அநாகரிகமாகும். சமயத்தின் பெயரால் அதனை மேற்கொள்வது பெரும் பாவமாகும். காந்திஜி தீண்டாமை ஒழிப்பிற்காகப் பெரிதும் பாடுபட்டுத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உரிமைகள் மீண்டும் கிடைக்க வழிவகை செய்தார்.

***சமய சமரசம் :***

“யாரும் பணிந்திடும் தெய்வம் - பொருள்

யாவினும் நின்றிடும் தெய்வம்

பாருக்குள்ளே தெய்வம் ஒன்று-இதில்

பற்பல சண்டைகள் வேண்டாம்'' என்றும்

“தெய்வம் பலபல சொல்லிப் பகைத்தீயை

வளர்ப்பவர் மூடர்” என்றும் எடுத்துரைப்பார்.

எல்லாச் சமயங்களும் ஒரே இறைவனைக் காண வெவ்வேறு வழிமுறைகளைக் காட்டுகின்றன. அவற்றின் அடிப்படைக் கருத்துக்கள் ஒரே வகையானவை. சமயத்தின் பெயரால் சண்டைகள் போடுதல் விலங்கு வாழ்க்கையின் வேறொரு வகையன்றி வேறில்லை . ஒழுக்கமே சமயங்களின் சாரம். எனவே சமயத்தின் பெயரால் சச்சரவுகளில் ஈடுபடுதல் சமய வாழ்க்கைக்கே முரணாகும். காந்திஜி சமூக ஒற்றுமைக்காகவே தம் வாழ்நாளெல்லாம் பாடுபட்டார். அதற்காகவே இறுதியில் தம்மைத் தியாகமும் செய்தார்.

சர்வோதய சமுதாய அமைப்பில் சாதியின் பெயரால் சமயத்தின் பெயரால் ஆண்-பெண் என்ற பாலடிப்படையால் ஏற்றத் தாழ்வுகள் கற்பிக்கப்பட மாட்டா. இவற்றின் பெயரால் மக்கள் தமக்குள் பூசலிட்டுக் கொள்ளமாட்டார்கள். எல்லோருக்கும் சம அந்தஸ்து இருக்கும்.

### *பொருளாதார சமத்துவம் :*

சமூக சமத்துவம் மட்டும் முழு இன்ப சமுதாயத்தைச் சமைத்து விட முடியாது. எல்லாவற்றையும் ஒன்றாகக் காணும் அருட்பண்புடன் பொருள் வளமும் மனித சமுதாயத்திற்கு வேண்டும். சமத்துவம், சமூகத்துறையில் மட்டுமின்றி பொருளாதாரத் துறையிலும் நிலவ வேண்டும். பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், குறிப்பிட்ட பகுதியினர் மற்ற பகுதியினரைச் சுரண்டி சுகபோகம் பெற வழி வகுக்கின்றன. அனைவரின் மேம்பாட்டையும் விரும்பும் சமுதாயம் சமூகத்தில் அனைவரும் சமம் என்பதை ஏற்றுக் கொள்வதோடு அனைவரும் சம பொருளாதார வாய்ப்புகள் பெற்று வாழ வகை செய்ய வேண்டும். ''சுக வாழ்க்கையிலோ சொத்துரிமையிலோ ஏற்றத்தாழ்வு ஏதுமங்கில்லை'' என்ற நிலை உருவாக வேண்டும் ஒரு சிலர் மட்டும் சுகபோகங்களை அனுபவிக்கவும் வேறு சிலர் வறுமையில் வாடவும் உள்ள இழிநிலை நீங்க வேண்டும்.

எல்லோருக்கும் வேலை வாய்ப்பு வேண்டும். பார்க்கின்ற தொழிலால் உயர்வு தாழ்வு பாராட்டுதல் தகாது. தொழில்களுக்கு சம அந்தஸ்து வேண்டும். எல்லோருக்கும் சம ஊதியம் கிடைக்கும்

வகை செய்ய வேண்டும். அவரவர் திறமைக்கேற்ப முழுமையாக உழைக்கவும் அவரவர் தேவைக்கேற்ப ஊதியம் பெறவுமான நிலை வேண்டும்.

குவியல் முறை உற்பத்தியிலீடுபட்டுச் செல்வத்தை ஒரு சிலர் கைகளில் முடக்கி பணம் படைத்தோர் தேவைகளையே நிறைவேற்றும் வகையில் உற்பத்தி செய்யும் நிலை நீங்க வேண்டும். மக்களின் தேவைப்பொருட்கள் பரவல் முறையில் உற்பத்தி செய்யப்பட்டு சுதேசி அடிப்படையில் பொருட்களின் விநியோகமும் நுகர்வும் மேற்கொள்ளப்பட்டால் சுரண்டலற்ற பொருளாதார நீதியும் சமூக நீதியும் தழைக்கும் சமுதாயத்தை உருவாக்கலாம்.

அச்சமுதாயத்தில் கொள்ளை யடித்திடத் தேவையில்லை - என்றும்
கொஞ்சமும் யார்க்கும் பஞ்சமில்லை
பண்ணையக் காரர்கள் எல்லோரும் - பின்னர்
பட்டினி என்கின்ற சொல்லேது?
வேண்டிய சுகங்கள் யாவும் பிறரைப் போல்
வேணமட்டும் உண்டு வேறெதற்கு?
வட்டிக்குப் போட பணமும் இல்லை-அங்கே
வட்டிக்கு வட்டி செய் சட்டமில்லை
பெட்டிக்குச் சாவியும் இல்லாமல்-வெறும்
பேச்சில் புரண்டிடும் நாணயங்கள்

அங்கே செல்வம் வெறும் காசுகளாக இராது. உழைப்பும் உழைத்து உற்பத்தி செய்யும் பொருட்களுமே செல்வமாகக் கருதப்படும். செப்புக்காசுகளையும் நோட்டுக் காகிதங்களையும் வைத்துக் கொண்டு நடத்தும் செப்பிடு வித்தைகளும் மாய்மாலங்களும் செல்லுபடியாகா.

தானியம் தவசம் அல்லாமல் - அங்கே
தங்கமும் வெள்ளியும் செல்வமல்ல
நாணய மாற்றென்ற நாடக ஜாலங்கள்
- நாகரீகப் பித்த லாட்டமில்லை.

உழைத்துண்ணும் வாழ்வை மக்கள் மேற்கொள்ளும் அச்சமுதாயத்தில் ஒருவரையொருவர் சுரண்டுவதற்கு இடமும்

எண்ணமும் இரா. எல்லோரும் எல்லாப் பெருஞ் செல்வமும் பெற்று அன்புடன் இன்புற்று வாழ்வர்.

*அரசு :*

சமூக, பொருளாதார சமத்துவம் பெற்று வாழ்கின்ற மக்கள் தமது சமுதாய உறவில், தமக்குள் ஒருவருக்கொருவர் பிணக்கினைத் தோற்றுவிக்கும் வகையில் பெரும்பாலும் செயல்பட மாட்டார்கள். ஒருவர் மற்றவரின் சுதந்திரத்தில் தலையிட மாட்டார். அப்போது மனிதர்களிடையே உறவுகளை நெறிப்படுத்தவும், நெறிதவறிச் செல்பவர்கட்குத் தக்க தண்டனை வழங்கி, உரிய பாதுகாப்பு வழங்கவும் ஒரு மேலமைப்பு தேவைப்படாமல் போகும். அங்ஙனம் அரசென்ற ஒரு அமைப்பு இல்லாத நிலை உருவாவதையே காந்தியடிகள் விரும்பினார்.

*அதிகாரம் :*

அரசியல் அதிகாரம் தேச வாழ்க்கையை ஒழுங்குபடுத்துவதற்கானது. மக்கள் வாழ்வின் எல்லாத் துறைகளையும் மேம்பாடடையச் செய்யும் ஒரு வழியாகவும் கருதப்படுவது. இன்று, அரசியல் அதிகாரம் பிரதிநிதிகளின் கைகளில் விட்டு வைக்கப்பட்டுள்ளது.)

*சுயக்கட்டுப்பாடு :*

ஒவ்வொருவரும் தம்மைத் தாமே ஒழுங்குபடுத்திக் கொண்டால் பிரதிநிதிகள் மூலம் ஆட்சி செய்வதற்குத் தேவையிராது. அப்படிப்பட்ட நிலையில் ஒவ்வொருவரும் தம்மைத் தாமே ஆண்டு கொள்வார்கள். ஒவ்வொருவரும் சுயகட்டுப்பாட்டுடன் வாழும் போது தான் அடுத்தவருக்குத் துன்பம் செய்யாமல், அடுத்தவர் சுதந்திரத்தில் தலையிடாமல் இருக்க முடியும். சுய கட்டுப்பாடுடைய ஒவ்வொருவரும் ஒழுக்க நியதிகளை ஒழுங்காகக் கடைப்பிடிப்பர். பிறரை ஏமாற்ற மாட்டார்கள். உண்மையை விட்டுக் கொடுக்கமாட்டார்கள். பெற்றோர் பெண் பிள்ளைகள், பணியாளர் மற்றும் அண்டை அயலார் அனைவருக்கும் தம் கடமையை நிறைவேற்றுவார்கள். அத்தகைய மனிதர்களே சுதந்திர புருஷர்கள். அவர்களின் மூலமே பிறரின் சுதந்திரமும் பாதுகாக்கப்படும். ஆள்வோர்ஆளப்படுவோர் என்ற உறவு முறை அப்போது அகலும்.

இலட்சிய சமுதாயத்தில் அரசியலதிகாரம் என்பது எதுவும் இராது. அரசு அற்ற நிலையை நூற்றுக்கு நூறு அடைய முடியாவிட்டாலும் அந்த இலட்சியப் பாதையில் நாம் முன்னேற

வேண்டும். அதனாலேயே "'எந்த அரசு மிகக் குறைந்த அளவு ஆட்சி செய்கிறதோ அந்த அரசே மிகச் சிறந்த அரசு'' என்று காந்திஜி விளக்கினார்.

அந்தச் சமுதாயத்தில்

''மன்னவன் என்ற மனிதனில்லை – அங்கே
மந்திரி தந்திரி யாருமில்லை ''
சின்னவர் என்றும் எவருமில்லை – பட்டம்
தேடி அலைந்திடும் மக்களில்லை
நல்லவர் கெட்டவர் என்பதெல்லாம் – அங்கே
ராஜாங்கப் பட்டப் பதவியல்ல
சொல்லில் நடத்தையில் சூரத்தில் தீரத்தில்
சுத்தனென்றுபலர் நத்துவதே''

எல்லோருக்கும் அங்கே சுதந்திரம் இருக்கும். அந்த ஜனநாயகம் அகிம்சை மூலம் கட்டப்படும். ஒவ்வொருவரும் தமது எஜமானராக இருப்பர்.

அதிகாரக் குவியல் :

அதிகாரம் ஒரு சிலர் அல்லது அரசின் கைகளில் குவிவதை காந்திஜி விரும்பவில்லை. தர்மகர்த்தாத் தத்துவம் எங்கும் செயல்பட வேண்டு மென்று விரும்பினார். ஒவ்வொருவரும் தம்மிடமுள்ள செல்வத்தையும் அதிகாரத்தையும் சமுதாய நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்று எடுத்துரைத்தார். தலைமகன்–கடைமகன் என்ற பிரிவு நிலை இருக்கக் கூடாது என்றார். அதிகாரங்கள் அனைவர்க்கும் பொது வாய் பரவலாக்கப்பட வேண்டும் என்றார்.

இந்தியா, கிராமங்களைக் கொண்ட நாடு. மத்தியில் ஒரு சிலர் கைகளில் ஜனநாயகத்தின் பெயரால் அதிகாரத்தை விட்டு வைத்து விட்டால் ஜனநாயகத்தையே காப்பாற்ற முடியாது. ஜனநாயகம் மக்களால் ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் செயல்படுத்தப்பட வேண்டும். மேல்மட்டத்தில் அதிகாரங்களைக் குவித்து வைத்து கீழேயுள்ளவர்களை அழுத்தி நிற்கும் இன்றைய நிலை ''பிரமிடு'' அமைப்பு முறை. இந்நிலை மாறி அமைப்பு

ஒவ்வொன்றும் ஒன்றையொன்று, அழுத்தாமல் ஒன்றுக்கொன்று துணையாக இருக்கும் நிலை உருவாக வேண்டும்.

## *அலைவட்ட அமைப்பு முறை :*

காந்தியடிகள் அலைவட்ட வடிவமான அமைப்பு முறை ஒன்றை இவ்வாறு கற்பனை செய்து பார்த்தார். அவர் கனவு கண்ட அவ்வமைப்பில் தனி மனிதன் நடுநாயகமாக இருப்பான். அத்தனி மனிதனின் சுதந்திரம் பெரிதும் போற்றப்படும். பரிபூரணமான அகிம்சை மக்களை ஆட்கொண்டிருக்கும் போது அது நூற்றுக்கு நூறு சாத்தியமாகவிருக்கும். அதே நேரத்தில் அந்தத் தனிமனிதன் அவனையடுத்த வட்டத்திற்குள்ளிருக்கும் கிராமத்தின் நன்மைக்காகத் தன்னையே தியாகம் செய்யச் சித்தமாயிருப்பான். கிராமம் அதனையடுத்துள்ள வட்டமான கிராமத் தொகுதிகளுக்காகத் தனது நலனைத் துறக்கத் தயாராக இருக்கும். கிராமத் தொகுதிகளோ மாவட்டத்திற்காகவும் மாவட்டங்கள் மாநிலத்திற்காகவும் மாநிலம் நாட்டிற்காகவும், நாடு உலகிற்காகவும் என ஒவ்வொன்றும் அதன் தனையடுத்த வட்டத்தின் நன்மைக்காகத் தத்தம்மைத் தியாகம் செய்து கொள்ளச் சித்தமாயிருக்கும். இந்த அலைவட்ட அமைப்பில் ஒன்று மற்றதன் முதுகின்மேல் ஏறி நிற்காது. ஒன்று மற்றதன் மேல் ஆட்சி செலுத்தாது. மாறாக ஒன்று மற்றொன்றுக்குத் துணையாக நிற்கும். பெருவட்டம் சிறுவட்டத்தை நசுக்காமல் அதற்கு ஆக்கம் அளிப்பதோடு அதனின்று ஆக்கமும் பெறும்.

## *சாத்தியமா ?*

இத்தகைய அமைப்பினை ஏற்படுத்துவது நடைமுறையில் சாத்தியமா என்று சிலர் கேட்கலாம். யூக்லிடின் புள்ளி என்ன என்பது நமக்குத் தெரியும். அதற்கு நீளமும் அகலமும் இல்லை என்பர். என்றாலும் நாம் அதனைப் புரிந்து கொண்டு கனமுள்ள ஒரு குறியிட்டு விளக்குகிறோம். அதே போன்று இந்த இலட்சிய அரசியலமைப்பு முறையையும் நன்கு தெரிந்து நம் மனக்கண்முன் அதனை நிறுத்திக் கொண்டு அதனையடைய அதனை நோக்கி முன்னேறுவோமானால் நல்ல பலன் கிட்டும். கிராம சுயராஜ்யத்தின் மூலம் இதனைச் சாத்தியமாக்கலாம் என்று காந்திஜி கருதினார். புதிய கல்வியும் நிர்மாணத் திட்டங்களும் உழைப்பின் பெருமை, கூடிவாழும் மனோபாவம், சமத்துவ உணர்ச்சி ஆகியவற்றைப் புகட்டி இதற்கு வழிகோலுவனவாகும்.

### *கிராம சுயராஜ்யம் :*

ஒவ்வொரு கிராமமும் ஒரு குடியரசாக விளங்க வேண்டுமென்று காந்திஜி விரும்பினார். டில்லியிலிருக்கிற அரசாங்கம் ஒவ்வொரு குக்கிராமத்திற்கும் வந்து அதற்கு மகிழ்ச்சியூட்டிக் கொண்டிருக்க முடியாது என்பார் புனிதர் வினோபா. ஒரு ஊரில் தீப்பிடித்தால் உறவினர்களும் தொலைவிலுள்ளவர்களும் வந்துதான் அதனை அணைக்க வேண்டும் என்ற நிலையிருந்தால் என்னவாகும்? அந்த ஊர்க்காரர்களே அதனை அணைக்க வேண்டும். மிகப்பெரிய நாட்டின் ஆட்சியை ஒரு தனி நபரோ, ஒரு குழுவோ ஒரு இடத்தில் இருந்து கொண்டு கவனிப்பது அசாத்தியம். ஒவ்வொரு கிராமமும் தன்னைத் தானே ஆண்டு கொள்ள வேண்டும். ஒவ்வொரு கிராமத்திலும் அதன் அலுவல்களைக் கவனிக்க ஒரு கிராம சபை - ஊரிலுள்ள வயது வந்தோர் அனைவரும் கூடும் சபை - அமைய வேண்டும். அந்தக் கிராமத்தின் தேவைகளை அச்சபை அறிந்து கொள்ள வேண்டும். முடிந்த அளவு அந்தக் கிராமத்திலேயே அத்தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ள அது முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். கிராமத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும் அதன் வளர்ச்சியில் ஈடுபடவும் கிராமசபை திட்டமிட வேண்டும். அங்ஙனம் திட்டமிடவும் திட்டங்களை நிறைவேற்றவும் கிராமசபைக்கு அதிகாரம் இருக்க வேண்டும். அரசியல் கட்சிக்காரர்கள் ஊருக்குள் புகுந்து மக்களைக் கட்சியின் பெயரால் பிரிக்க முனைந்தால் அதனைத் தடுக்க வேண்டும். அடுத்தடுத்த வட்ட அமைப்புகளுக்குத் தேவையான கொஞ்சம் கொஞ்சம் அதிகாரங்கள் அடித்தளத்திலிருந்து அளிக்கப் பெறும். அடுத்தடுத்த வட்ட அமைப்புகளுக்கு நேர்முகத் தேர்தல்களின்றி பிரதிநிதிகளே தேர்ந்தெடுக்கும் முறை மேற்கொள்ளப்படலாம். மேலே செல்ல செல்ல அதிகாரங்கள் குறைந்து அடித்தளத்தில் அதிகாரங்கள் விரிந்து தன்னிறைவுள்ளவைகளாக கிராமங்கள் தம்மைத் தாமே ஆண்டு கொள்ளும். வயது வந்தவர்கள் அனைவரும் பங்கு பெறும் முறையில் சர்வஜனங்களின் சம்மதம் பெற்ற ஆட்சி முறையே அங்கு நடைபெறும். கிராம சபையின் ஒருமித்த முடிவுகளே நிறைவேற்றப்படும். கிராம மக்கள் அனைவரும் மக்களாட்சியில் நன்கு பழக்கப் பெறுவர். ஒரு சில அல்லது பெருவாரியான மக்களின் நலன் என்பதின்றி ஒட்டு மொத்தமான அனைத்து மக்களின் நலனுக்காக அனைத்து மக்களின் அதிகாரமும் ஆட்சியிலேயே ஆவன செய்யப்படும். இத்தகைய ஆட்சி முறை தமிழகத்திற்குப் புதியதன்று. உத்திரமேரூர்ச் செப்பேடுகள் காட்டும்

உள்ளூர்ப் பஞ்சாயத்து ஆட்சிமுறை மக்கள் நேரடியாகத் தாங்களே பங்கு பெறுகிற ஆட்சி முறையின் சாத்தியத்தை நமக்கு விளக்குகின்றன. இத்தகைய கிராம சுயராஜ்யத்தில் கிராம மக்களிடம்காணப்படும் தீய பழக்கங்கள் நீக்கப்படும். குடி முதலிய வேண்டாத வழியிலிருந்து மக்களை விலக்க ஆவன செய்யப்படும். கிராம மக்களிடையே ஏற்படும் சண்டை சச்சரவுகளைக் கிராமசபையே தீர்த்து வைக்கும்.

அத்தகைய நிலையினைக் காந்தியக் கவிஞர் திரு.வெ.இராமலிங்கம் (நாமக்கல் கவிஞர்) அவர்கள் இவ்வாறு பாடுகிறார்

வாது வழக்குக்கு நேரமில்லை - அங்கே
வஞ்சித்து வாழமுடியாது
சூது செய் பந்தயம் ஏதுமில்லை - முற்றும்
சோம்பிச் சுகிக்க வழியுமில்லை .
ஊருக்குப் பத்துப்பேர் நல்லவர்கள் - பொது
யோசனை செய்திட வல்லவர்கள்
ஆருக்கும் எதிலும் ஓரங்கள் செய்யாமல்
அப்பப்போ தீர்ப்புகள் செப்பிடுவார்.
கச்சேரி என்றொரு கட்டடமும் - அதைக்
கண்டு நடுங்குதல் அங்கிலையே
அச்சமில்லாமலே யாரும் பொறுப்புடன்
அங்கங்கே நீதி நடத்திடுவார்.

நீதிக்காக ஓடியலைந்து நகரத்திற்குச் சென்று பொருளை விரையம் செய்து நிலை கெட்டுப் போகின்ற போக்கினை கிராம சுயராஜ்யம் தவிர்க்கும். அங்கே,

துக்கத்தைச் சொல்லி அழுவதற்கும் வெகு
தூரம் நடந்து பிராது சொல்லிப்
பக்கத்தில் நின்றவர் ஏனென்று கேட்கவும்
பற்றற்றுப் போவதும் சற்றுமில்லை.

## *இராமராஜ்யம் :*

இத்தகைய கிராமராஜ்யத்தில் வாழும் மக்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்ளாமல் பூசலில்லாமல் வாழ்வார்களே யானால் அதுவே இராமராஜ்யமாகிவிடும். தனது தேவைகளுக்குத் தானே திட்டமிட்டு நிறைவேற்றி தன்னிறைவு பெற்று சுவட்டுறவுடன் வாழும் கிராம சமுதாயம், பூசலிடாது ஒரே மனிதன் போல் செயல்பட்டால் ஒப்பற்ற இன்பம் விளையும். அப்போது

ஒப்பி மனங்களித் தெல்லோரும் - அங்கே
உண்டு உடுத்துக்க ளித்திடுவார்
தப்பிதம் செய்திடத் தோன்றாதே - அதன்
தண்டனை தந்திட வேண்டாது

ஒவ்வொரு கிராமமும் ஒரு பாதுகாப்புக் கோட்டையாக விளங்கும். பிற நாட்டின் மேல் ஆசை கொள்ளாததனால் நாட்டுக்குப் பகைவர் எவருமிருக்க மாட்டார்கள். ஆண்டான். அடிமை, உயர்ந்தோர் -தாழ்ந்தோர், உடையோர் இல்லாதோர் இல்லாத அந்த ஒப்பிலாத சமுதாயத்தையே காந்திஜி இராமராஜ்யம் என்றார்.

## *காந்திஜி காண விரும்பிய இராமராஜ்யத்தில் :*

1. உயர்ந்தோரும் தாழ்ந்தோரும் ஒரு சேர எல்லோரும் இந்நாட்டு மன்னர்களாகத் திகழ்வார்கள். அங்ஙனம் திகழ அவர்கள் அனைவரும் தூயவர்களாக விளங்குவார்கள். இல்லையேல், தூயவர்களாக ஆகிக் கொள்வார்கள். தூய்மை, ஞானத்தோடு கைகோர்த்து நிற்கும்.

2. யாரும் சாதிப்பாகுபாடுகள் பார்க்க மாட்டார்கள். ஒவ்வொருவரும் பிறரைச் சமமாகவே கருதுவர். அன்பு அவர்கள் அனைவரையும் பிணைத்து நிற்கும். யாரும் பிறரைத் தீண்டத்தகாதவராகக் கருதமாட்டார்கள்.

3. வேலை செய்யும் தொழிலாளியும் பணம் நிறைந்த முதலாளியும் ஒரே அந்தஸ்துள்ளவர்களாகக் கருதப் படுவார்கள். ஒவ்வொருவருக்கும் தமது தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள உழைத்து வாழும் வகை தெரிந்திருக்கும். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுத் தமது உடல் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வார்கள். மூளை உழைப்பிற்கும் உடல் உழைப்பிற்கும் இடையே உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட மாட்டாது. இந்த நிலையை

விரைவில் உருவாக்க ஒவ்வொருவரும் துப்புரவுத் தொழிலாளராவர்.

4. சுதேசி வாழ்க்கை நியதியாக இருக்கும்.

5.அறிவுள்ள யாரும் மதுவையும், மயக்கும் பொருட்களையும் தீண்டார். மனைவியைத் தவிர மற்றப் பெண்களை அவர் தம் வயதிற்கேற்பத் தாயாகவோ, சகோதரியாகவோ, மகளாகவோ மதிக்கும் மனப்பக்குவம் ஆடவருக்கு இருக்கும். தவறான இச்சை அவர்களின் உள்ளங்களை ஆக்கிரமிக்காது.

6. எவரும் பிறர் உயிரைப் போக்க விரும்பமாட்டார்கள். அதே நேரத்தில் தேவையேற்பட்டால் ஒவ்வொருவரும் தம்மைத் தாமே தியாகம் செய்யச் சித்தமாயிருப்பார்கள்.

***நிறைவுரை :***

காந்திஜி காண விரும்பிய இத்தகைய இராமராஜ்யத்தின் சித்திரத்தைப் பின்வருமாறு நம் மனக்கண் முன் கொணர்கிறார். ''கிராம ராஜ்ய'த்திற்காகத் தம் வாழ்நாளெல்லாம் அயராது பாடுபட்ட திரு.கோ.வேங்கடாசலபதி அவர்கள் :

“மாநில முழுவதும் மக்களின் உடமையாம்
மக்களெல்லோரும் மன்னர்களாவர்.
எளிதாய் விரைவாய் எவர்க்கும் ஆங்கே
நிலைதவறாத நீதி கிடைக்கும்
எழுத்தில் பேச்சில், இறைவனைத் தொழுவதில்
சுதந்திரச் சோதி சுடர் விட்டொளிரும்
இத்தகைய ராஜ்யம் ஏற்படுவதற்குத் தத்தம்
பணியைத் தாமே செய்திடும்
கடனறி மக்களே காரணமென்ற காந்திஜி
வாசகம் கருத்திடைக் கொண்டு இன்ப உலகம் இராம ராஜ்யம்
நிலைபெற அனைவரும் நித்தமும் உழைப்போம்''

# 8. பயணம் தொடர்கிறது

*ரா. ரெங்கசாமி*

## *முன்னுரை :*

மாபெரும் மனிதர்கள் உடலால் மறைந்துவிட்டாலும் அவர்களுடைய கொள்கைகள் நிலைத்து நிற்கின்றன. அவர்களுடைய இயக்கங்கள் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு வடிவத்தில் வெவ்வேறு மனிதர்களால் சிறப்பாக நடத்தப்படுகின்றன. இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரியோர்களுள் மானிடத் தெய்வமென மதிக்கப்பட்டவர் காந்தியடிகள். வன்முறையும், சுரண்டலும், ஏற்றத்தாழ்வும், காலனியாதிக்கமும் பரவி நின்ற தன்மையை அறப்போர் முறையால் அகற்றி, அமைதிப்பணியால் மனித இனத்தை வாழ்விக்க முயன்றார். ஓரளவு வெற்றியும் பெற்றார். அவருடைய கொள்கைகள் பரவின. உலகம் அவரை மதிக்கத் தொடங்கியது. எந்தக் கொள்கைக்காக உழைத்தாரோ அதற்காகவே உயிரையும் தந்தார். அவர் மறைவுக்குப் பிறகு அவர் இலட்சியங்கள் மேலும் மேலும் உரம் பெறுவதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். காந்தியடிகள் விட்டுச் சென்ற இயக்கத்தைத் தொடர்ந்து நடத்தும் பெருமை பெற்ற நன்மக்களில் தலையானவர் வினோபா பாவே ஆவார். காந்தியின் அரசியல் வாரிசு நேரு என்றால், ஆன்மீக வாரிசு வினோபா என்று சொல்லலாம். 'மகாத்மாக்கள் இறப்பதில்லை' என்ற தத்துவத்திற்குச் சரியான விளக்கமாக வினோபாபாவின் வாழ்க்கை அமைந்துள்ளது. அவருடைய வார்த்தைகளும் செயல்களும் 'காந்தியடிகள் வாழ்கிறார்; அவர் தம் இயக்கம் வளர்கிறது' என்பதை உறுதிப்படுத்துகின்றன.

## *வினோபாவின் தொண்டு :*

வினோபாபாவே 1916-ஆம் ஆண்டிலேயே, காந்தியடிகளின் சபர்மதி ஆசிரமத்தில் சேர்ந்துவிட்டார். ஆனால் வெளி உலகிற்கு நெடுங்காலம் தெரியாமலே இருந்தார். அவருடைய எளிமைக்கும் அடக்கத்திற்கும் இதுவே சான்று. மாணவப் பருவத்திலேயே கிராம மக்களின் ஏழ்மையையும் நகரவாசிகளின் மேம்பாட்டினையும் கண்டு வருந்தியிருக்கிறார். தினம் ஐந்து மணி நேரம் வேலை செய்யும் கல்லூரி ஆசிரியருக்கு மாதம் ரூ.1100ம், நாள் முழுவதும் உழைக்கும் கிராமத்தானுக்குத் தினசரி வருமானம் நாலணாவுமாக இருந்ததைப் பிற மாணவர்களுக்குச் சுட்டிக் காட்டினார்.

ஹோலிப்பண்டிகையன்று தன் சான்றிதழ்களைச் சுட்டெரித்தார். படித்தவன் என்ற அகங்காரத்திலிருந்து விடுபடுவதற்காக அவ்விதம் செய்ததாகக் கூறினார். "'இண்டர் மீடியட்' தேர்வு எழுதப் போவது போல புறப்பட்டு, காந்தியின் சபர்மதி ஆசிரமம் போய்ச் சேர்ந்து தொண்டரானார். ''ஆசிரமத்திற்கு வருபவர்கள் பொதுவாக ஆசீர்வாதம் பெற வருவார்கள். ஆனால் இவரோ எங்கள் ஆசிரமத்தையே ஆசீர்வதிக்க வந்தவர்" என்று காந்தியடிகள் இவரைப் புகழ்ந்து கூறினார். ''சத்தியாக்கிரஹி'' என்ற சொல்லுக்கு அவரே தகுதியானவர் என்று காந்திஜி கருதியபடியால்தான் 1941-ல் தனிநபர் சத்தியாக்கிரகத்திற்கு முதல் சத்தியாக்கிரகியாக அவரைத் தேர்ந்தெடுத்தார்.

வினோபா, காந்தியடிகளைப் போல எளிமையின் சின்னமாகத் திகழ்ந்தார். அன்றைய தினத்தில் இந்திய மக்களின் சராசரி வருமானமாகிய இரண்டணா செலவில் தன் உணவைச் சரிக்கட்ட முயன்றார்.

காந்தியடிகளின் மறைவிற்குப் பிறகு, இனக் கலவரத்தால் குடிபெயர்ந்த அகதிகளின் குடியிருப்புகளில் வேலை செய்தார். காந்தியடிகளின் சர்வோதய இலட்சியத்தை நிறைவேற்றும் நோக்குடன் சர்வோதய சமாஜத்தை நிறுவினார். நாளுக்கு நாள் அஹிம்சையைப் பற்றிச் சிந்தித்துப் புதிய அனுபவத்தைப் பெற வேண்டுமென்று வலியுறுத்தினார். மக்களின் வறுமையைத் தீர்க்கும் வழிமுறைகளைப் பற்றி ஆராய்வதிலேயே மனதைப் பெரிதும் ஈடுபடுத்தினார்.

### *பாத யாத்திரை :*

1951-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 8-ம் தேதி பௌனார் ஆசிரமத்தை விட்டு வினோபா பாத யாத்திரையாகப் புறப்பட்டது, காந்திய இயக்கத்தில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. தினமும் சராசரி பத்து மைல் வீதம் கிராமங்கள் வழியாகவும் மலைகள் வழியாகவும் நடந்தார். தாமே நூற்றுத் துணி நெய்தல், திருகையில் மாவு அரைப்பது, நாட்டுச் செக்கில் எண்ணெய் ஆட்டுவது, சுகாதாரம், ஒற்றுமை, சுரண்டாமை, உடலுழைப்பு, இறைப்பற்று ஆகிய உபதேசங்களைச் செய்தும், ஹரிஜனங்கள்,

கொல்லர், தச்சர், தறிகாரர்களை உற்சாகப்படுத்திக் கொண்டும் சென்றார். உள்ளும் புறமும் சுத்தமாயிருத்தல், சுயதேவைக்கு உழைத்தல், யாவரிடமும் அன்பாயிருத்தல் ஆகிய மூன்றையும் வலியுறுத்தினார். சாந்திசேனை, கிராமங்களைச்

சுற்றிக் கொண்டே வரவேண்டும். பஞ்சம், பலாத்காரம், நோய் நிகழுங்காலையில் மக்களைக் காப்பது சாந்திசேனையின் கடமையாகும் என்று குறிப்பிட்டார்.

தெலங்கானாப் பகுதியில் சுரண்டலுக்காளாகியிருந்த ஏழை மக்களை விடுவிக்க வன்முறையாளர் முயன்றனர். வன்முறை பெருகி போலீஸ் அடக்குமுறை அதிகமாகி மக்கள் தாங்கொணாத் துன்பங்களுக்காளாயினர். வினோபா அப்பகுதியில் பாதயாத்திரை செய்து அமைதியை நிலைநாட்ட முயன்றார். இந்து முஸ்லீம் கலவரத்தால் தலைவிரித்தாடிய வெறிச் செயல்களைத் தணிக்க, காந்தியடிகள் மேற்கொண்ட ''நவகாளி யாத்திரை'யைப் போன்று வினோபாவின் ''பாத யாத்திரை'' அமைந்தது. ''நில முதலாளிகள் காலமாறுதல்களை உணர வேண்டும். எண்ணற்ற ஏழைகள் நிலமின்றி, உணவு உடைக்கு வகையில்லாமல் வாடும்போது சில முதலாளிகள் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களைச் சொந்தமாக வைத்துக் கொண்டு சுகமனுபவிப்பது பாவம். ஏழைகளைச் சகோதரர்களாகக் கருதி உதவ வேண்டும். தேவைக்கு மேல் வைத்திருப்பது திருட்டு" என்று வினோபா அறிவுரை கூறினார். அதே சமயத்தில் ஏழைகளுக்கு நியாயம் பெறுவதற்காக வன்முறைகளை மேற்கொள்வது அறவழியல்ல. வீணான உயிர்ச் சேதமும் குழப்பங்களும், விரயமும் தான் ஏற்படும். எனவே வன்முறையை விட்டு அமைதி வழியாம் சத்தியாக்கிரகத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்தார். அவருடைய சொற்களிலும் செயல்களிலும் காந்தியமே விரவி நின்றது. அவருடைய பாத யாத்திரையின் பயனாய் புதிய வரலாறு உருவாயிற்று. மனித உள்ளத்தின் ஆழத்தில் புதைந்து கிடந்த அன்பு ஊற்று அவருடைய வேண்டுகோள் பட்ட மாத்திரத்தில் ஆறாக ஓட ஆரம்பித்தது.

## *பூதான இயக்கம் :*

1951-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 18-ம் தேதி தெலுங்கானாவில் போச்சம் பள்ளி என்ற கிராமத்தில், நடைபெற்ற பிரார்த்தனைப் பொதுக்கூட்டத்தில், "நிலம் படைத்தவர்கள்" தம்முடன் வாழும் நிலமற்ற ஏழைமக்களுக்கு உதவி எதுவும் செய்ய முடியாதா? என்று வினவினார்.

100 ஏக்கர் நிலத்தை இராமச்சந்திரரெட்டி என்ற அன்பர் தானமாகக் கொடுத்தார். அது முதல் பூமிதான இயக்கம் ஆரம்பமாயிற்று. புத்துணர்வு பெற்ற வினோபாபாவே நாடு முழுவதும்

நடந்தே சென்று நிலதானம் கோரிப் பெற்றார். போகிற இடங்களிலெல்லாம் காந்திய நெறிகளையும் ஆன்மீகத் தத்துவங்களையும் மக்களிடம் பரப்பினார். ஆயிரமாயிரம் தொண்டர்கள் இவ்வியக்கத்தில் ஈடுபட்டனர். வினோபாவின் இயக்கம் இந்திய அரசாங்கத்தின் கவனத்தை ஈர்த்தது. இந்தியத் தலைமையமைச்சர் ஜவஹர்லால் நேருவிடமிருந்து ஐந்து வருடத்திட்டத்தைப் பற்றி யோசனை கூற டெல்லி வருமாறு அழைப்பு வந்தது. ராஜகட்டத்தில் குடிசையில் தங்கிய வினோபாவை குடியரசுத் தலைவர் ராஜன் பாபுவும், நேருவும், ஐந்தாண்டுத்திட்டச் சிற்பிகளும் சந்தித்தனர். கிராமவாசிகளின் நலத்தை முதன்மையாகக் கொண்டு, கிராம சுயதேவைப் பூர்த்தியை இலட்சியமாக ஏற்று பொருளாதாரத் திட்டம் செயல்பட வேண்டும் என்று வலியுறுத்தி விட்டு வினோபா தம் பாதயாத்திரையை மறுபடியும் துவக்கினார். பூமிதான இயக்கம் நாடு தழுவிய இயக்கமாக மாறிற்று. பதவிகளையும் அந்தஸ்தையும் தூக்கியெறிந்து விட்டுப் பல தலைவர்கள் வினோபாவின் அணியில் சேர்ந்தனர். ''ஊரிலுள்ள நிலமனைத்தும் உலக நாதன் உடைமையே'' என்று முழங்கிக் கொண்டு நாடெங்கும் தொண்டர்களும் தலைவர்களும் நிலதானம் பெற்றனர். பெற்ற நிலங்களை ஏழைகளுக்குப் பிரித்துக் கொடுக்கும் வேலை சமாளிக்க முடியாத அளவிற்கு இயக்கம் பரவியது. இயக்கத்தை வலுப்படுத்துவதற்காக மத்திய, மாநில அரசுகள் தாமே முன்வந்து பூதானச் சட்டங்களை இயற்றின.

## *உலகம் நோக்குகிறது :*

வினோபாவை உலகமே உற்றுப்பார்க்க ஆரம்பித்தது. காந்தியடிகளின் தத்துவத்தை உலகிற்கு அறிமுகப்படுத்தும் தூதராக ஆனார். இருபதாம் நூற்றாண்டில் இப்படியும் ஒரு மனிதரா என்று எள்ளி நகையாடப்பட்ட நிலை மாறியது. இவரன்றோ மனிதர் என்றனர். காந்தியடிகளின் மறு அவதாரம் என்றனர். பூதான யாத்திரையில் மேல் நாட்டுமக்கள் சிலரும் கலந்து கொண்டனர். சட்டங்களும் அதிகாரமும் செய்ய முடியாத அற்புத சாதனைத் தனி மனிதனின் ஆன்ம பலம் நிகழ்த்தும் அற்புதத்தைக் கண்டு வியந்தனர்.

உத்திரப் பிரதேசத்தில் மங்கராத் என்னும் கிராமத்தைச் சேர்ந்த மக்கள் கூட்டு தானப்பத்திரத்தைக் கொடுத்து '''கிராம தான, இயக்கம்'' மலரச் செய்தனர். இவ்வியக்கம் நாளடைவில் சாதன தானம், செல்வ தானம், உழைப்பு தானம், அறிவு தானம்,

ஜீவன் தானம், சாந்திசேனை, சர்வோதயப் பாத்திரம் என ஒவ்வொருவரும் பங்கு கொள்ள ஏதுவாக வளர்ச்சி பெற்று சர்வோதய சமுதாயம் அமைக்கும் முயற்சியாக மலர்ந்தது.

வினோபாவின் நிலக்கொடை இயக்கம் காந்தியடிகள் விரும்பிய தேசிய ஒருமைப்பாட்டை வளர்த்தது. பல்வேறுபட்ட அரசியல் கட்சிகளும், சமூக இயக்கங்களும் வினோபாவை ஒன்றுபட்டு வரவேற்று ஊக்கப்படுத்தின. இன, மத, மொழி வேற்றுமைகள் அவர் முன்னால் மண்டியிட்டு மறைந்தன.

காந்தியடிகளுக்குப் பிடித்தமான தீண்டாமை ஒழிப்புக்கு வினோபா முக்கியத்துவம் கொடுத்தார். தானமாகக் கிடைத்த நிலங்களைப் பகிர்ந்தளிப்பதில் ஹரிஜனங்களுக்கு முதலிடம் தரப்பட்டது. பீஹார் மாநிலத்தில் தேவ்கார் என்னும் ஊரில் வைத்தியநாதர் ஆலயத்துக்குள் ஹரிஜனங்களை அழைத்துச் செல்ல விரும்பிய காந்தியடிகள் தடுக்கப் பட்டார். அவர் வாழ்நாளில் முற்றுப் பெறாமல் இருந்த இப்பணியை நிறைவேற்ற விரும்பிய வினோபா 1953-ல் ஹரிஜனங்களுடன் அவ்வாலயம் சென்றபோது பூசாரிகளால் தாக்கப்பட்டார். அவர் மேல் விழுந்த அடி நாட்டு மக்களை நாணச் செய்தது. நன்மக்கள் விழிப்படைந்தனர். இதன் விளைவாய் அரசாங்கம் தீண்டாமை ஒழிப்புச் சட்டத்தைத் தீவிரமாய் அமுல் செய்தது.

காந்தியடிகளால் உருவாக்கப்பட்ட நிர்மாணத் திட்டங்கள் வினோபா இயக்கத்தால் மேலும் வலிமை பெற்றன. கிராமக் குடிசைத் தொழில்கள் வளர்ச்சி பெற வேண்டிய இன்றியமையாமையை வினோபா ஒவ்வொரு நாளும் வலியுறுத்தி வந்தார்.

சுதந்திரப் போராட்ட காலத்தில் அரசியல் சண்டைகளையும் மத இனப் போராட்டங்களையும் வன்முறைக் கொலை நிகழ்ச்சிகளையும் தடுத்து நிறுத்தும் அஹிம்சா வீரராகக் காந்தியடிகள் இருந்தது நாமறிந்ததே. பகைவனையும் நேசி என்று அவர் உபதேசித்ததை நாடறியும். அது போலவே வினோபாவும் விளங்கினார். அரசியல் கொந்தளிப்புக்களைத் தன் அமைதியாலும் நோன்பாலும் தணிக்கிறார். அநீதியை எதிர்க்க வன்முறை வேண்டாம்; சத்தியாக்கிரகமே சரியான ஆயுதம் என வலியுறுத்துகிறார். ''ஆன்மீகமும் விஞ்ஞானமும் இணைய வேண்டும். அப்போது தான் மனிதன் மனிதனாக வாழ்வான்'' என்னும் அவர் கூற்று காந்தியத் தத்துவத்தின் கருவூலமாகும்.

காந்தியடிகளின் இயக்கத்தின் உயிரோட்டமாக விளங்கும் வினோபா இந்தியா உலகிற்களித்த உயர்ந்த நன்கொடை என்று நாம் பெருமை கொள்ளலாம்.

### *மற்ற நாடுகளில் :*

காந்திக்குப் பின்னர் காந்தி நெறி இயக்கம் உலகின் மற்றப் பகுதிகளிலும் இடம் பெற்று வருவதைப் பார்க்கிறோம். உலகை ஒரே மூச்சில் நாசப்படுத்துமளவிற்கு ஆயுதங்களைப் பெருக்கிக் கொண்ட வல்லரசுகள், 'போர் முறை பிரச்சனையைத் தீர்க்காது, அமைதி வழிதான் சரியான முறை', ''சமாதான சகவாழ்வே மானுடம் உய்யவழி '' என்பதை உணர்ந்து வருகின்றன. அநீதியையும் சமூகக் கொடுமையையும் எதிர்க்க அறப்போர் இயக்கம் மேற்கொள்ளப்படுகிறது.

### *மாண்ட்கோமரி சத்தியாக்கிரகம் :*

அமெரிக்க காந்தி என்று நாம் போற்றுமளவிற்கு மாவீரர் மார்ட்டின் லூதர்கிங், அறப்போர் முறையை வெற்றிகரமாகப் பயன்படுத்தினார். அடிமைத் தளையில் சிக்கித் தவித்த அமெரிக்க நீக்ரோ மக்களை விடுவிக்க அவர் போராடிய முறை காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் கருப்பு நிற மக்களுக்காக நடத்திய சத்தியாக்கிரக முறையாகும். நிறவெறிக் கொடுமையை எதிர்த்து மாண்ட்கோமரி நகரில் மார்ட்டின் தொடுத்த "பேருந்து மறியல் போர்'' அமெரிக்காவில் காந்தி நெறி இயக்கத்தின் முதல் அத்தியாயம் எனலாம். பேருந்து வண்டிகளில் நீக்ரோ மக்கள் கேவலமாக நடத்தப்பட்டதை எதிர்த்துத் தான் இந்த இயக்கம் நடத்தப் பட்டது. வெள்ளையர் நடத்திய பேருந்து வண்டிகளை நீக்ரோ மக்கள் புறக்கணித்து விட்டு அலுவலகங்களுக்கு நடந்தே சென்றனர். சிலர் கோவேறு கழுதைகளில் ஊர்ந்து சென்றனர்.

சிலர் பாரவண்டிகளில் ஏறிச் சென்றனர். வெள்ளையரின் பேருந்துகள் வெறுமனே ஓடின. ஏற்றத் தாழ்வு நீக்கப்படும் வரை போராட்டத்தை நீடித்தனர். போராட்டச் செய்தி உலகெல்லாம் பரவியது. போராட்ட நிதி குவிந்தது. ஆதரவுக்கூட்டங்களுக்கு மக்கள் வெள்ளம் போல் திரண்டனர். ஆட்சியாளரின் அடக்குமுறையும் அதிகரித்தது. மார்ட்டின் சிறைப்படுத்தப்பட்டார். மக்கள் கொதிப்படைந்தனர். மருண்ட அரசாங்கம் மார்ட்டினை விடுதலை செய்தது. சதிக் கும்பல் மார்ட்டினின் வீட்டை வெடிகுண்டு வீசிச் சிதறடித்தது. அவர் குடும்பம் மயிரிழையில் உயிர் தப்பியது. இச்செய்தியைக் கேட்ட ஆயிரக்கணக்கான நீக்ரோ மக்கள் பயங்கர

ஆயுதங்களேந்திச் சீற்றமுடன் சுற்றி வந்தனர். எங்கும் பதட்டநிலை. ஆனால் மார்ட்டின் அம்மக்களை அமைதிப்படுத்தி, ''கத்தி முனை ஆற்றும் வேலையை விட நம் கண்ணீர் மிகுதியாக ஆற்றும்'' என்று கூறினார். 'போராட்டத்தின், ஆற்றலே நேர்மையுணர்வுதான், வன்முறை வேண்டாம்; நன்முறையை நம்புங்கள்; பகைவருக்கும் அருள் புரியுங்கள்' என்று அவர் கூறினார். இரக்கமற்ற அரசு அவரை மறுபடியும் சிறைப்படுத்தியது. நீதிமன்றம் பேருந்துகளில் ஒதுக்கற் கொள்கை சட்டத்திற்குப் புறம்பானது என்று தீர்ப்பு வழங்கியது. 382 நாட்களாக நடைபெற்ற அறப்போர் வெற்றி வாகை சூடியது. நீக்ரோவரும் வெள்ளையரும் ஒன்றாக சம வாய்ப்புடன் பேருந்துகளில் பயணம் செய்யத் தொடங்கினர். 27 வயது இளைஞரான மார்ட்டினின் இவ்வெற்றி அவரை அமெரிக்க காந்தியாக உலகிற்கு அடையாளம் காட்டிற்று.

## *இயக்கம் வளர்கிறது :*

1957 ஜூன் மாதம் 60 நீக்ரோத் தலைவர்கள் கூடி மார்ட்டின் தலைமையில் "தென் மாநிலக் கிறிஸ்தவத் தலைமை மன்றம்'' என்ற அமைப்பை உருவாக்கினர். மனிதத் தன்மையை நிலைநாட்டும் இயக்கத்திற்கு நீக்ரோ மக்களைப் பக்குவப்படுத்துவதே இதன் பணி. தீமையோடு ஒத்துழைக்கக் கூடாது என்பதுவும் இதன் திட்டம். தீமையை எதிர்க்க ஏசுநாதரின் அன்பு நெறியைப் பின்பற்ற வேண்டும் என்பது இதன் கொள்கை. அறப்போர், கோழைகளின் ஆயுதமன்று ஆற்றாமையின் அறிகுறியன்று. எளியோரை வலிமையுடையவராக ஆக்கவும் இடையூறுகளை எதிர்க்கும் உறுதியை ஊக்கவும் வல்ல ஆயுதமே அது என்று இம்மன்றம் அறிவித்தது.

அறப்போர்வீரர் மார்ட்டின் ஆபத்துகளின் மத்தியிலேயே வாழ வேண்டியிருந்தது. காலணிக்கடை ஒன்றில் அமர்ந்திருந்த அவரை நீக்ரோ மாது ஒருத்தி கத்தியால் குத்தினாள். காயமடைந்த மார்ட்டின் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுக் குணமானார். தென்னாப்பிரிக்காவில் இந்தியன் ஒருவன் காந்தியடிகளைக் குண்டாந் தடியால் தாக்கிய நிகழ்ச்சி போன்றது இது.

வெள்ளையர்கள் மார்ட்டினைத் "தீவிரவாதி என்றும்' நீக்ரோ மக்களைச் சட்டத்திற்குப் புறம்பாகத் தூண்டி விடுகிறார், என்றும் குற்றம் சாட்டினார்கள். அதற்கு அவர் அளித்த பதில் - "'தீவிரவாதி என்று என்னைத் தூற்றுகிறார்களே, அதில் ஒரு வகையான மன நிறைவு கூட அடைகிறேன். பகைவனை

நேசியுங்கள் என்று கூறிய ஏசுநாதர் அன்பு நெறியிற் சென்ற தீவிரவாதி அல்லரோ? நீரோட்டம் போல நீதி பெருகட்டும், நீரோடை போல நேர்மை இயங்கட்டும் என்று கூறிய அமோசு தீவிரவாதி தானே? சரிபாதி மக்கள் அடிமைத் தனத்திலும் மற்றொரு பாதி மக்கள் உரிமை பெற்றும் இருப்பின் அமெரிக்கா பிழைக்காது என்று கூறிய ஆபிரகாம் லிங்கன் தீவிரவாதி அல்லரோ?'' நான் தீவிரவாதியா, அல்லனா என்பதன்று கேள்வி. எப்படிப்பட்டது என் தீவிரவாதம் என்பதுதான் சிந்திக்கத் தக்கது. என் தீவிரவாதம் வெறுப்பைப் புகுத்துகிறதா, அன்பைப் புகட்டுகிறதா, என்பது தான் கேள்வி! ஆகவே அன்பைப் புகட்டும் தீவிரவாதம்தான் காலத்தின் தேவை'' மார்ட்டின் லூதர் கிங், மகாத்மாவின் மனச்சாட்சியாகவே விளங்கினார். காந்தி நெறி இயக்கம் புதிய உலகத்தில் புதுப் பொலிவுடன் வீரநடை போட்டது. கட்டவிழ்த்து விடப்பட்ட அடக்குமுறையையும் சட்டத்தின் ஓர வஞ்சனையையும், கொலை வெறி கொண்ட வெள்ளையரின் தாக்குதலையும் பொறுமையுடன் தாங்கிக் கொண்டது. பல்லாண்டு காலம் ஒடுங்கிக் கிடந்த உரிமையுணர்வு கிளர்ந்தெழுந்தது. 'உடனே விடுதலை வேண்டும்' என்று நீக்ரோவர் ஆடினர், பாடினர்; வீதிகளில் கூடினர், கூடி வாழும் சமுதாய உரிமைகளை நீக்ரோவருக்கு வழங்கிட வகை செய்யும் மசோதா அமெரிக்கக் கூட்டரசு சட்ட மாமன்றத்தின் முன் குடியரசு தலைவர் கென்னடியால் கொண்டு வரப்பட்டது. இம்முயற்சிக்கு வலுவூட்டும் வகையில் இரண்டரை லட்சம் கொண்ட மக்கள் அணிவகுப்பைத் தலைநகர் வாஷிங்டன் நோக்கி மார்ட்டின் நடத்தினார். இந்தச் சந்தர்ப்பத்தில் கென்னடி கொலையுண்டார். உலகமே அழுதது.

1964-ம் ஆண்டுக்குரிய சமாதானத்திற்கான நோபல் பரிசு மார்ட்டினுக்கு வழங்கப்பட்டது. அறப்போராட்டத் திட்டத்தை இனவெழுச்சி வரலாற்றில் புகுத்தியமைக்காக இப்பரிசு கிட்டியது.

மார்ட்டின் நடத்திய மற்றொரு அறப்போர் அலபாமா பகுதி நீக்ரோக்களுக்கு வாக்குரிமையும் சட்டமன்றத்தில் இடம்பெறும் தகுதியும் கிடைக்க வழி செய்தது.

***உயிர்த்தியாகம் :***

மெம்பிஸ் நகரில் துப்புரவுத் தொழிலாளர்கள் நடத்திய அறப்போர் பற்றி ஆலோசனையில் கலந்து கொண்டிருந்த மார்ட்டின் சதிகாரன் ஒருவனால் சுட்டுக் கொல்லப்பட்டார். அமெரிக்காவே அதிர்ந்தது. மனித இனம் கண்ணீர் விட்டது. காந்தியடிகளோடு

ஒப்ப வைத்து எண்ணத்தக்க உத்தமர். மார்ட்டின் கொள்கைக்காகவே உயிர்ப்பலியானார்.

காந்தியடிகள் மனித இனத்திற்கு விட்டுச் சென்ற சிறந்த முறை அறப்போர். அவருக்குப் பின்னர் இக்கிளர்ச்சி முறை உலகத்தின் பல்வேறு பகுதிகளிலும் அடிமைத்தனத்தையும் ஆதிக்கச் சக்தியையும் அகற்றி வருகிறது. இதைத் திறம்பட செயற்படுத்திய தலைவர்களுள் தலையாயவர் மார்ட்டின் லூதர்கிங்.

## *அன்பு நெறி தொடர்கிறது :*

சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட அன்பு நெறி மூலம் காந்தியடிகள் கண்ட வெற்றி அவரோடு முடிந்து விடவில்லை. முடிந்து விடாது. அது தொடர்ந்து நடைபெறுகிறது. வினோபாபாவே, மார்ட்டின் லூதர்கிங் போன்ற சான்றோர்களின் வாழ்க்கையும் அவர் தம் இயக்கங்களும் இதைத்தான் எடுத்துக்காட்டுகின்றன.

# காந்திய சிந்தனைத் தேர்வுக்குரிய நூல்கள்

## சான்றிதழ் தேர்வு

| | | |
|---|---|---|
| சத்திய சோதனை | - | மகாத்மா காந்தி |
| காந்திஜி | - | டாக்டர். மா.பாதமுத்து |
| காந்தி யுகம் | - | டாக்டர். மா.பா.குருசாமி |
| சர்வோதயம் | - | " " |
| அஹிம்சை | - | டாக்டர். அப்துல் ரஸாக் |
| காந்திக்கு முந்திய புரட்சிகள் | - | மகரிஷி. க.அருணாசலம் |

## டிப்ளமோ தேர்வு

| | | |
|---|---|---|
| காந்தி வழிச் சமயம் | - | தி.சேஷாத்திரி |
| பதினொரு மகாவிரதங்கள் | - | மகாத்மா காந்தி |
| சத்தியமே கடவுள் (ரகுபதி ராகவ) | - | மகாத்மா காந்தி |
| பெண்களுக்கு | - | மகாத்மா காந்தி |
| உலக அமைதிக்கு அகிம்சை வழி | - | மகாத்மா காந்தி |
| வகுப்பு ஒற்றுமை | - | மகாத்மா காந்தி |
| சமூகத்தில் பெண்கள் | - | மகாத்மா காந்தி |
| நிர்மாண திட்டம் | - | மகாத்மா காந்தி |
| சர்வோதயம் | - | மகாத்மா காந்தி |
| ஜனநாயகம் உண்மையும் போலியும் | - | மகாத்மா காந்தி |
| இந்திய சுயராஜ்யம் | - | மகாத்மா காந்தி |
| காந்தி வழி வாழ்க்கை | - | டாக்டர்.ஜே.ஸி.குமரப்பா |
| உழைப்பு | - | " " |
| காந்தி வழி ஓர் அறிமுகம் | - | க.ரா.கந்தசாமி |
| கோட்பாடுகளில் காந்தியம் | - | டாக்டர்.முத்துலட்சுமி |
| | - | டாக்டர்.ஆண்டியப்பன் |
| காந்திய சிந்தனைகள் | - | டாக்டர்.மா.பா.குருசாமி |
| காந்தி வழி கல்வியும் சமூகமும் | - | டாக்டர்.மா.பாதமுத்து |




கிடைக்குமிடம் :-

## காந்திய இலக்கிய சங்கம்

காந்தி மியூஸியம், மதுரை - 625 020.